ஸாரிடோன்




சகல விதமான வலிகளையும்

10 நிமிஷங்களில் நிறுத்துகிறது




மலர் 5 | இதழ் 45

1946 ஜூன் 16

விய | ஆனி 2



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

சென்ற 1942-ம் வருஷத்து ஆகஸ்டு இயக்கமானது பாரதத்தாயின் புதல்வர் புதல்வியர்களுக்குள்ளே பல வீர புருஷர்களையும் வீர நாரீமணிகளையும் பிரசித்தி செய்தது. அவர்களில் மிகப் பிரசித்தியடைந்த ஒருவர் ஸ்ரீமதி அருணா ஆஸப் அலி. இந்தியாவின் பெயர்பெற்ற சி. ஐ. டி. இலாகா வேவுகாரர்களுக்கு 'டிமிக்கி' கொடுத்துக் கொண்டு மூன்று வருஷ காலத்துக்கு மேல் இவர் அக்ஞாதவாசம் செய்தார். அக்ஞாத வாசத்தில் இருந்தவண்ணம் இந்தியாவின் சுதந்திரத்துக்காக என்னவெல்லாமோ அதிசயமான காரியங்களைச் செய்துகொண்டு வந்தார்.




இந்தியாவின் சுதந்திரத்தை அடைவதற்காக பிரிட்டிஷ் இட்ட திட்டங்களை மட்டுமல்லாமல் காந்திஜியின் திட்டங்களையும் மீறிக் காரியம் செய்வதற்கு முனைந்திருக்கும் காங்கிரஸ் ஸோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவர் ஸ்ரீமதி ஆஸப் அலி. அந்தக் கட்சியின் முக்கிய தலைவர்களான ஸ்ரீ ஜயப்பிரகாச் நாராயண், ஸ்ரீ அச்சுத பட்டவர்த்தன், டாக்டர் மனோஹர லோஹியா ஆகிய மூன்று பேரோடு நாலாவது பிரபல தலைவராக விளங்கி வருகிறவர். இந்த நாலு பேரும் கையெழுத்திட்டு, "பிரிட்டிஷ் மந்திரிகளின் திட்டத்தைக் குப்பையிலே தள்ளுங்கள்!" என்று சமீபத்தில் அறிக்கை விடுத்திருப்பதை நேயர்கள் அறிவார்கள்.

இந்திய ரயில்வேத் தொழிலாளர்கள் 1942-ஆகஸ்டில் வேலை நிறுத்தம் செய்யவில்லை என்ற காரணத்துக்காகத் தற்சமயம் அவர்களுடைய வேலை நிறுத்த யோசனையைச் சில புத்திசாலிகள் எதிர்த்துப் பேசுகிறார்கள் அல்லவா?

இத்தகைய குறுகிய மனப்பான்மை கொள்ளாமல் ஸ்ரீமதி அருணா ஆஸப் அலி ரயில்வேத் தொழிலாளர்களின் கட்சியைப் பூரணமாக ஆதரிக்கிறார். அவர்கள் வேலை நிறுத்தம் செய்ய நேர்ந்தால் மாகாண காங்கிரஸ் கமிட்டிகள் உதவி நிதி வசூலித்துத் தரவேண்டும் என்றும் கோரிக்கை விடுத்திருக்கிறார்.

ஸ்ரீமதி அருணா ஆஸப் அலி போன்றவர்கள் தங்களுடைய அரும் பெரும் ஆற்றல்களைச் சுதந்திர இந்தியாவின் பொதுஜன சேவைக்குப் பயன் படுத்தும் காலம் கூடிய சீக்கிரத்தில் வரும் என்று எதிர்பார்க்கிறோம்.

# இப்பொழுது பூராவும் வெண்மையானது —ஜாஸ்தி அழுக்குப்படியும் இடங்கள் உள்பட

ஒவ்வொரு உடையிலும் சீக்கிரம் மலினமாகும் பாகங்கள் உண்டு—அந்த பாகங்களை சொற்பமாக சோப்பைத் தேய்த்து, தண்ணீரில் நனைத்து அடித்துத் துவைப்பதால் அதிகமாகக் கெட்டுப்போகக் கூடியவை.

உங்கள் துணிகளை ஸன்லைட் முறைப்படி சுத்தம்செய்து அடித்துத் துவைப்பதனுலேற்படும் நாசத்தை விலக்குங்கள்.

ஸன்லைட் சோப்பின் ஏராளமான சுபமாக இயங்கிற நுரையை நனைந்த துணியிடையே புகுத்திக் கசக்கி, பிறகு அலசி சுத்தம் செய்தால், துணி மிக தூய்மையாகவும், வெண்மையாகவுமாகிறது . . . அத்துடன் உங்கள் ஆடைகளுக்கு, இச் சுத்தமான சோப்பைப் பயன்படுத்துவோருடைய இஷ்டபோகமான சேவைகளையொத்த மிருது நன்மையும் ஏற்படுகிறது. ஸன்லைட் உங்கள் துணிகளுக்கும், அவையின் சாயங்களுக்கும் குணமளிப்பதோடு, உங்கள் கைகளை மிருதுவாகவும், மழமழப்பாகவும் வைத்துக் கொள்ளுகிறது.

இது ஸன்லைட் முறைப்படி சுத்தம் செய்தது!






# ஸன்லைட் சோப்

S. 70-23 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED




மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 15

# என்ன சேதி?

## ரொம்ப சரி!

சென்னை சர்க்காரின் உணவு இலாகா மிகவும் சுறுசுறுப்பாக வேலை செய்கிறது என்பதைப் பார்க்க மிகவும் சந்தோஷமாயிருக்கிறது. ஒரு மணங்கு நெல்லுக்கு ஒரு ரூபாய் விதம் (அதாவது, கலத்துக்கு ஒன்றரை ரூபாய் விதம்) சர்க்காரால் கொடுக்கப்படும் போனஸ் விவசாயிக்கு மட்டுந்தானா, கள்ள மார்க்கெட் முதலாளிக்கும் உண்டா என்ற பிரச்னையைச் சென்ற "கல்கி" இதழில் எழுப்பியிருந்தோமல்லவா? அந்த இதழ் சென்னையில் வெளியான அன்றைய தினமே சென்னை சர்க்காரின் உணவு இலாகா ஓர் அறிக்கை வெளியிட்டது. அதில் விவசாயிகளுக்கு மட்டுந்தான் மேற்படி போனஸ் கொடுக்கப்படும் என்று விளக்கமாகக் கூறி, ரைஸ் மில் முதலாளிகள் தங்களுக்கும் அதிக விலை கிடைக்குமென்று காத்திருக்க வேண்டாம் என்று தெரிவித்திருக்கிறார்கள். விவசாயிகள் மேற்படி போனஸ் தொகையைப் பெற்றுக் கொள்வதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதையும் விவரமாகச் சொல்லியிருக்கிறார்கள். ரொம்ப சரி; பத்திரிகையில் ஒரு விஷயத்தை எழுதினோம், அது பன்னிரண்டு மணி நேரத்துக்குள் பயன்பட்டது என்பது மிகவும் அபூர்வமான காரியம். சென்னை சர்க்காரின் உணவு இலாகா இவ்வளவு விழிப்புடனிருப்பதைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

## அடி சக்கை!

சென்னை மாகாணத்துக்கு முதன்மை ஸ்தானம் வாங்கிக் கொடுப்பதில் பிரதம மந்திரி பிரகாசம் கொஞ்சமும் பின் வாங்குவதில்லையென்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார். மொத்தம் நமது மாகாணத்திற்குப் பதினைந்து பார்லிமெண்டரி காரியதரிசிகள் என்று தெரியப்படுத்தியிருக்கிறார். ரூ. 600 சம்பளத்தில் ஒரு சீப் பார்லிமெண்டரி செக்ரடரியைத் தவிர, தமக்கென்று இரண்டு பார்லிமெண்டரி காரியதரிசிகளை அமர்த்திக் கொண்டிருக்கிறார். எது எப்படியானாலும் பார்லிமெண்டரி காரியதரிசிகளின் விஷயத்தில் சென்னை மாகாணம் மற்ற மாகாணங்களை ரொம்பவும் முந்திக் கொண்டு விட்டது! பதினைந்து பார்லிமெண்டரி காரியதரிசிகளுக்குப் பதினைந்து உதவி காரியதரிசிகள் ஏற்படுத்துவது பற்றி அடுத்தாற் போல் யோசனை செய்வது நலம். மொத்தம் 160 காங்கிரஸ் எம். எல். ஏ.க்களில் இதுவரையில் 30 பேருக்கு உத்தியோகம் கிடைத்திருக்கிறது. இன்னும் 30 பேருக்கு ஏதாவது உத்தியோகம் போட்டுக் கொடுத்து விட்டால் அப்புறம் நமது புதிய மந்திரி சபையை யாராலும் அசைக்க முடியாது. உத்தியோகம், சம்பளம் சம்பந்தப்பட்ட வரையில் சென்னை மாகாணத்தை மற்ற மாகாணங்கள் எட்டிப் பிடிக்கவும் முடியாது.

## கதைப் போட்டி

வழக்கம் போல இந்த வருஷத்திலும் "கல்கி" சிறு கதைப் போட்டி நடத்தத் தீர்மானித்திருக்கிறோம் என்பதை எழுத்தாளர் நேயர்களுக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். போட்டி விதிகள் வேறொரு பக்கத்தில் வெளியாகியிருக்கின்றன. செப்டம்பர் 30உக்குள்ளே கதைகள் அனுப்பப்பட வேண்டும். இந்தத் தடவை முடிவுத் தேதி ஒத்திப் போடப்பட மாட்டாது. பஞ்சாயத்தாரின் பெயர்கள் பின்னால் தெரிவிக்கப்படும்.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: ஆர். சேதுராமன், 26, 'ஜீ' தெரு, அல்சூர், பெங்களூர்.

# நிகழ்ச்சிச் சித்திரம்



-உம்மன்


சமீபத்தில் எடுக்கப்பட்ட
"அரசன்
என்று
வெளியேறிச் செல்லுங்கள்
அரசர்
இத்தாலியப் பொதுஜனம்


யூகோஸ்லேவியாவிலிருந்து வெளியேற்றப்பட்ட அரசர் தற்சமயம் இங்கிலாந்தில் உத்தியோகம் தேடிக் கொண்டிருக்கிறார்.
வேலை வேண்டும்


பட்டார்.
ருமேனியா
இராஜாக்களும், திருடர்களும் வரக்கூடாது


ஐரோப்பாவில் முடிதரித்த மன்னர்களுக்கு இனி இடமே கிடையாது.


ஆனால் இந்தியாவிலோ, பிரிட்டிஷ் மந்திரிகளின் திட்டத்தின்படி
சுதேச மன்னர்களுக்குச் சர்வ சுதந்திரம் அளிக்கப்படுகிறது.

# குழப்ப வேண்டாம்

மகா-ள-ள-ஸ்ரீ மகா கனம் பொருந்திய நமது மூன்றாம் வகுப்பு ரயில் பிரயாணி இருக்கிறாரே, அவர் ரொம்ப அதிர்ஷ்டசாலி! அவருக்கு என்ன வெல்லாமோ எதிர்பாராத பெருமைகள் எங்கிருந்தோ வந்து சேர்கின்றன. என்ன வெல்லாமோ அபாரமான பொறுப்புகள் அவர் தலையிலே வந்துவிழுகின்றன.

ரயில்வே ஸ்டேஷன்களிலே நமது மூன்றாம் கிளாஸ் 'பாஸஞ்சர்' அவர்கள் டிக்கட் வாங்குவதற்குள்ளே அவருடைய வாய்ப் பிராணன் தலைக்கு வந்து விடுகிறது. பிறகு, பிளாட்பாரத்துக்குள் புகுவதற்குள்ளே பஞ்சப் பிராணனும் போய் விடுகிறது. ரயிலுக்குள்ளே பிரவேசிப்பதற்கு அவர் படும் பாடு ஆண்டவனுக்கே தெரியும். பிரயாணம் செய்யும்போது அவர் படும்பாடு அந்த ஆண்டவனுக்குக் கூடத் தெரியாது!

இப்படி யெல்லாம் நமது மூன்றாம் வகுப்புப் பிரயாணி அரும்பாடு பட்டு ரயில்வே கம்பெனிகளுக்குப் பெருமித லாபத்தைக் கொடுத்திருக்கிறார்.

அதிலும், சென்ற யுத்தம் ஆரம்பித்தது முதல் ஒன்றுக்கு ஆறு மடங்கு விதம் ரயில்வே கம்பெனிகளுக்கு அதிக லாபத்தைக் கொடுத்து வருகிறார்.

என்ன, நம்ப முடியவில்லையா? நல்லது; சில புள்ளி விவரங்களைக் கேளுங்கள். தென்னிந்தியாவில் சில முக்கியமான ரயில்வே ஸ்டேஷன்களில் சென்ற ஐந்து வருஷத்துக்குள்ளே பிரயாணிகளின் தொகை எவ்வளவு அதிகரித்திருக்கிறது. அவர்களால் ரயில் வருமானம் எவ்வளவு உயர்ந்திருக்கிறது என்பதைக் கொஞ்சம் கவனியுங்கள்.

| ஸ்டேஷன்கள் | பிரயாணிகள் 1939 | 1944 | வருமானம் 1939 | 1944 |
|---|---|---|---|---|
| 1. கோயமுத்தூர் | லட்சம் 8 | லட்சம் 15 | லட்சம் ரூ. 4½ | லட்சம் ரூ. 17 |
| 2. சேலம் | 1½ | 4½ | 1 | 2½ |
| 3. ஈரோடு | 3¾ | 8½ | 2½ | 8 |
| 4. மதுரை | 17 | 31 | 9 | 20 |

இவ்விதம் பிரயாணிகளின் தொகையும் வருமானமும் அதிகரித்திருக்கிறதல்லவா? அதற்குத் தகுந்தாற்போல வண்டிகள் 'அதிகமாக விட்டார்களா' என்று கேட்டால், அதுதான் இல்லை. வண்டிகளின் தொகை குறைந்திருக்கிறது.

1938-ல் விட்ட வண்டிகளை வி[ட] 1944-ல் 100-க்கு 43 வண்டி வித[ம்] குறைத்து விட்டிருக்கிறார்கள்!

எனவே, பிரயாணிகளின் பெருக்கத்தையும் வண்டிகளின் குறைவையும் சேர்த்துக் கணக்கிட்டுப் பார்த்தா[ல்] ஒரு பிரயாணியின் இட வசதியை நா[லு] பிரயாணிகள் பகிர்ந்து கொண்டு பிரயாணம் செய்திருக்கிறார்கள்!

ஒவ்வொரு 'ஸ்லாடக் போடக்' ரயி[ல்] வண்டியும் ஒன்றுக்கு ஆறு மடங்[கு] விதம் ரயில் கம்பெனிகளுக்கு அதி[க] வருமானத்தைக் கொடுத்திருக்கிறது!

இப்படியாக எறும்பு புகமுடியாம்படி ஆ[கி]கிற ஓட்டை உடைசல் வண்டிகளி[ல்] ஒருவர் தலை மேல் ஒருவரும் ஒரு[வர்] தொடை மேல் ஒருவருமாக நெருக்[கி] உட்கார்ந்து மூச்சுத் திணறிப் பிராண[ன்] போகும் நிலையில் பிரயாணம் செய்[து] ரயில்வே கம்பெனிகளுக்கு லாபம் ச[ம்]பாதித்துக் கொடுத்த, கொடுக்கிற, கொடுக்கப் போகிற மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளின் தலையில் இப்போ[து] இன்னொரு பெரிய பாரம் சுமரும்போல[த்] தோன்றுகிறது.

பன்னிரண்டு ரூபாய் மாதச் சம்பளத்துக்காக அடி வயிற்றை இறுக்கிக் க[ட்]டிக்கொண்டு நெற்றி வியர்வை நில[த்]தில் விழப் பாடுபடும் காங்கிக் கூ[லி] என்ன, பதினெட்டு ரூபாய் மாத[ச்] சம்பளத்துக்காகப் பகல் இரவு என்[று] பாராமல் ஸ்டேஷனிலேயே படு[த்]கிடந்து பாடுபட்டு உழைக்கு[ம்] பாயிண்ட்ஸ்மேன் என்ன, இவர்களுக்கெல்லாம் கொஞ்சம் சம்பளம் கூட்டிக் கொடுக்காமல் சால்ஜாப்பு சொல்[வ]தற்கு மூன்றாம் வகுப்புப் பிரயாணி இப்போது உபயோகப்படுகிறார்!

அதாவது மேற்படி ஏழைத் தொழிலாளிகளுக்குச் சம்பளம் உயர்த்த முடியாது என்று மறுப்பதற்கு மூன்றாம் வகுப்புப் பாஸஞ்சர் தலையிலே பழியைப் போடப் பார்க்கிறார்கள்!

ரயில்வேத் தொழிலாளர்களுக்குச் சம்பளத்தை உயர்த்தினால் பிரயாணிகளின் கட்டண விகிதத்தை உயர்த்த வேண்டியதாயிருக்குமாம்!

இப்படி ரயில்வே போர்டு முதலாளிகளும் ரயில்வே ஏஜெண்டுகளும் இந்திய கவர்ன்மெண்டாரும் சொல்லிப் பயமுறுத்துகிறார்கள்!

ஆனால் சென்ற ஐந்து வருஷ காலமாக நமது கனம் பாஸஞ்சர் அவர்கள் ரயிலின் நாலில் ஒரு பங்கு இடத்தில் உட்கார்ந்து ஒன்றுக்கு ஆறு மடங்கு அதிக வருமானத்தை ரயில்வேக் கம்பெனிக்குக் கொடுத்திருக்கிறாரே? அந்தப் பணமெல்லாம் எங்கே போயிற்று? அதற்காக ரயில்வே கட்டணம் குறைக்கப் பட்டதா? அல்லது பாஸஞ்சருக்கு அதிக சௌகரியம் ஏற்படுத்தப் பட்டதா? பிரயாணத்தில் இலவசச் சாப்பாடாவது போடப்பட்டதா? அந்தப் பணமெல்லாம் என்ன ஆயிற்று? எந்த முதலையின் வயிற்றில் போயிற்று?

இப்போது ஏழைத் தொழிலாளியின் சம்பளத்தை உயர்த்த வேணு மென்றால், பிரயாணக் கட்டணத்தை உயர்த்த வேண்டும் என்று ஏன் சொல்கிறார்கள்?

ஏழைத் தொழிலாளர் சம்பளத்தை உயர்த்த மறுக்கும் ரயில்வே போர்டார் அதற்குக் காரணமாக மூன்றாம் வகுப்புப் பிரயாணிகளோடு பொதுஜனங்களையும் சில சமயம் சேர்த்துக் கொள்கிறார்கள். வரப்போகும் பஞ்சத்தையும் குறிப்பிட்டு வைக்கிறார்கள். எல்லாவற்றையும் சேர்த்துக் குழப்பி, "ஐயையோ! ரயில்வேத் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்யலாமா? செய்தால் மகா பாதகமல்லவா?" என்று கண்ணீர் வடிக்கிறார்கள்.

* * *

"முதலையே! முதலையே! ஏன் கண்ணீர் விடுகிறாய்?" என்று நதிக் கரையிலே நின்ற முயல் குட்டி கேட்டது.

"அதை ஏன் கேட்கிறாய்? உலகத்திலேயுள்ள முயல்கள் எல்லாம் பஞ்சத்தினாலும் பசியினாலும் படும் கஷ்டத்தை நினைத்தால் எனக்கு நெஞ்சு உடைந்து போகிறது. கண்ணீரை அடக்கி அடக்கிப் பார்த்தாலும் அடங்காமல் குபு குபு வென்று வெளியே வந்து விடுகிறது!" என்று கரையிலே தலையும் தண்ணீரிலே வாலுமாயிருந்த முதலை சொல்லிற்று.

முயல் குட்டி முதலைமேல் பரிதாபம் கொண்டு அதற்குத் தேறுதல் கூறுவதற்காக அருகில் சென்றது.

அவ்வளவுதான்; முயல் குட்டி முதலை வயிற்றுக்குள்ளே சென்றது; முதலையும் தண்ணீருக்குள்ளே சென்றது.

மேற்படி முதலையின் கருணையைப் போலவே இந்தியப் பொது மக்களிடமும் மூன்றாம் வகுப்பு ரயில் பிரயாணிகளிடமும் ரயில்வே முதலாளிகளுக்குத் திடீரென்று அபாரமான கருணை பிறந்திருக்கிறது. அந்தக் கருணையானது கண்ணீராக மாறிப் பத்திரிகைகளில் பத்தி பத்தியாகப் பெருகி ஓடுகிறது.

"இந்தப் பஞ்ச காலத்தில் ரயில் வேலை நிறுத்தம் செய்யலாமா? பொது ஜனங்கள் எவ்வளவு கஷ்டப் படுவார்கள்?" என்று குடம் குடமாகக் கண்ணீர் வடிக்கிறார்கள்.

"ரயில்வேத் தொழிலாளரின் சம்பளத்தை உயர்த்தினால் ரயில் பிரயாணிகளிடம் அதிகக் கட்டணம் வசூலிக்க வேண்டியிருக்குமே?" என்று மிக்க பரிதாபப் படுகிறார்கள்.

இந்தியாவிலேயே மிகப் பெரிய முதலாளிகளான ரயில்வே போர்டாரும், ரயில்வே ஏஜெண்டுகளும் இத்தகைய முதலைக் கண்ணீர்ப் பிரசாரத்தைச் செய்வதில் ஆச்சரியம் அதிகம் இல்லைதான். எதிர்பார்க்கக் கூடியதுதான்.

ஆனால் எது ஆச்சரியமான விஷயம் என்றால், தொழிலாளியின் நண்பர்கள் என்று சொல்லிக் கொள்கிறவர்கள், தொழிலாளருக்கு அனுகூலமாகப் பேசுவதுபோல் பேசி அவர்களுடைய மன உறுதியைக் குலைத்துப் பிளவை உண்டு பண்ணுவதே யாகும்.

"சல்லிய சாரத்தியம்" என்று நேயர்கள் கேள்விப்பட்டிருப்பார்கள். அதாவது, மகா வீரனாகிய கர்ணனுக்கு ரதம் ஓட்டச் சாரதி தேவையாயிருந்தது. "அர்ஜுனனுக்குக் கிருஷ்ணன் சாரத்தியம் செய்கிறான். எனக்கும் அப்படி ஒரு நல்ல சாரதி இருந்தால் அல்லவா என் போர்த் திறமையைக் காட்டலாம்!" என்று கர்ணன் துரியோதனனிடம் கூறினான். அதன் பேரில் துரியோதனன், ரதம் ஓட்டும் வித்தையில் கை தேர்ந்த சல்லிய மகாராஜனைக் கர்ணனுக்குச் சாரத்தியம் செய்யும்படி கேட்டுக் கொண்டான். துரியோதனன் சொல்லைத் தட்ட முடியாமல் சல்லியனும் சம்மதித்தான்.

சல்லியன் ரதம் ஓட்டும் வித்தையில் தேர்ந்தவன்தான். ஆனால் அவன் கையில் சாட்டை இருந்தது போல் அவனுடைய நாவில் சனியன் இருந்



பாயிண்ட்ஸ்மேனுக்கு மாதச் சம்பளம் பதினெட்டு ரூபாய்தான்;............

---

தது. சாரதி பீடத்தில் உட்கார்ந்தபடியே அவன் அடிக்கடி கர்ணனைப் பார்த்து, 'அர்ஜுனனையாவது, நீ ஜயிக்கவாவது? அர்ஜுனன் எப்பேர்ப்பட்ட வீரன்? எப்பேர்ப்பட்ட வில்லாளி? பீஷ்மரும் துரோணரும் செய்ய முடியாத காரியத்தை நீயா செய்துவிடப் போகிறாய்?'' என்று சொல்லிக் கொண்டிருந்தான். இதனால் கர்ணனுக்கு மனோ தைரியம் குறைந்து வந்தது. கடையில் தோல்வியடைந்து இறந்தான் என்பது பாரதக் கதை.

அம்மாதிரி சல்லிய சாரத்தியம் செய்யும் அருமையான சிநேகிதர்கள் ரெயில்வேத் தொழிலாளர்களுக்குக் கிடைத்திருக்கிறார்கள். ரயில்வேத் தொழிலாளரிடம் பரிபூரண அபிமானங் கொண்ட இந்த மகானுபாவர்கள் மாற்றி மாற்றித் தொழிலாளர்களுக்கு உபதேசம் செய்யப் புறப்பட்டிருக்கிறார்கள். ''அவசரப் படாதீர்கள். பொறுமையைக் கடைப் பிடியுங்கள்!'' என்று ஒருவர் உபதேசிக்கிறார்.

''பஞ்சம் வரப் போகிறது; ஆகையால் இப்போது வேலை நிறுத்தம் செய்யாதீர்கள்!'' என்று இன்னொருவர் வேண்டுகிறார்.

''தேசிய சர்க்கார் ஏற்படப் போகிறது; இந்தச் சமயத்தில் வேலை நிறுத்தம் செய்யலாமா?'' என்று மற்றொருவர் கேட்கிறார்.

''பொதுஜன அபிமானத்தை இழந்துவிடுவீர்கள்! ஜாக்கிரதை!'' என்று வேறொருவர் எச்சரிக்கிறார்.

''அட்ஜுடிகேடரை நியமிக்கச் சம்மதிப்பதாக மிஸ்டர் பெந்தால் யாரிடமோ சொன்னதாக எந்தப் பத்திரிகையிலோ வெளியாகியிருக்கிறதாகத் தெரிகிறபடியால் வேலை நிறுத்தம் செய்யாதீர்கள்!'' என்று கேட்டுக் கொள்கிறார் இன்னொருவர்.

இப்படிச் சல்லிய சாரத்தியம் செய்யும் மகானுபாவர்களிலே சில மாஜி தொழிலாளர் தலைவர்களும் இருக்கிறார்கள். மந்திரி பகவிக்கு வந்ததும் சட்டுப் புட்டென்று தங்கள் சம்பளத்தை இரண்டு மடங்கு ஆக்கிக் கொண்டவர்களும் இருக்கிறார்கள்.

இப்படியாக இரு பக்கத்திலிருந்தும் செய்யப்படும் பிரசாரத்தினால்,— எதிரிகள் ஒரு பக்கத்தில் செய்யும் முதலைக் கண்ணீர்ப் பிரசாரத்தினாலும் நண்பர்கள் மற்றொரு பக்கத்தில் செய்யும் அநுதாபப் பிரசாரத்தினாலும்,—பெரும் குழப்பம் ஏற்பட்டு முக்கியமான பிரச்னை இன்னதென்பது மறைந்து போய் விடுவதைக் காண்கிறோம்.

* * *

சரி; அந்த முக்கியமான பிரச்னைதான் என்ன?

ரயில்வே வேலை நிறுத்தம் நல்லதா கெடுதலா என்பதன்று.

ரயில்வே வேலை நிறுத்தத்தினால் தேச மக்களுக்குக் கஷ்டம் ஏற்படுமா இல்லையா என்பதன்று.

ரயில்வே வேலை நிறுத்தத்தினால் தேசத்துக்கும் தேச மக்களுக்கும் தேசத்தின் பொது வாழ்வுக்கும் எத்தனையோ கஷ்டங்கள் ஏற்படும் என்பதில் யாதொரு சந்தேகமும் இல்லை.

இரத்த ஓட்டம் திடீரென்று நின்று போனால் அதனால் தேகத்துக்கு எவ்வளவு கஷ்டம் ஏற்படுமோ, அவ்வளவு கஷ்டம் ரயில் ஓட்டம் நின்றால் தேசத்துக்கு ஏற்படும்.

எனவே, ரயில் வேலை நிறுத்தம் ஏற்படாமல் தடுக்கப் பெரு முயற்சி செய்ய வேண்டியதுதான்.

ஆனால் அந்த முயற்சியை எந்த முறையில் செய்வது?

ரயில்வே போர்டையும் இந்திய கவர்ன்மெண்டையும் வற்புறுத்தி ரயில்வேத் தொழிலாளருக்கு நீதி வழங்கும்படி கிளர்ச்சி செய்வது முறையா?

தொழிலாளருக்குப் பொறுமை உபதேசம் செய்து அவர்களுடைய தைரியத்தைக் குறைத்துக் கட்டுப்பாட்டைக் குலைப்பது முறையா?

எந்த முறை நியாயமானது? தர்மமானது? தேச நன்மைக்கும் பொது ஜன நன்மைக்கும் உகந்தது?

இதைப் பற்றி முடிவு செய்வதற்கு முன்னால், ரயில்வேத் தொழிலாளரின் கோரிக்கை நியாயமானதா, இல்லையா என்பதை முதலில் தீர்மானித்துக் கொள்ள வேண்டும். இதுதான் எல்லாவற்றிலும் முக்கியமான பிரச்னை.

ரயில்வேத் தொழிலாளர் என்ன கோருகிறார்கள்?

1. சம்பளம் அதிகம் கோருகிறார்கள்: குறைந்த பட்சமாக மாதம் ரூ. 35 வேண்டுமென்று கோருகிறார்கள்.

2. இப்போது வேலையில் உள்ளவர்கள் யாரையும் வேலையை விட்டு நீக்கக் கூடாது என்று கோருகிறார்கள்.

3. கவர்ன்மெண்டாரே முன்னொரு தடவை நியமித்த ராவ் கமிட்டி சிபாரிசின்படி அலவன்ஸ் கேட்டிருக்கிறார்கள்.

4. மூன்றுமாதச் சம்பளம் போனஸ் வேண்டுமென்று கோருகிறார்கள்.

இவையெல்லாம் நியாயமான கோரிக்கைகள்தானா? உங்களாலும் நம்மாலும் உடனே சொல்ல முடியாது.

ஆனால் ரயில்வேத் தொழிலாளிகள் மேற்படி கோரிக்கைகளை உடனே அப்படியே ஒப்புக் கொண்டுதான் தீர வேண்டும் என்று கேட்கவில்லை.

மேற்படி கோரிக்கைகளின் நியாய நியாயங்களைப் பரிசீலனை செய்து தீர்ப்புச் சொல்ல ஒரு நீதிபதியை (அட்ஜுடிகேடரை) நியமியுங்கள் என்றுதான் கோருகிறார்கள்.

இதைவிட நியாயமான கோரிக்கை வேறொன்றும் இருக்க முடியாது.

இந்த நியாயமான கோரிக்கையைத்தான் ரயில்வே போர்டாரும் இந்திய கவர்ன்மெண்டாரும் இன்னும் மறுத்துக் கொண்டிருக்கிறார்கள். அப்படி மறுப்பதோடுகூடப் பொது ஜனம், பஞ்சம், மூன்றாம் வகுப்புப் பாஸஞ்சர் முதலியவர்களைச் சந்திக்கு இழுத்து உண்மையான பிரச்னையைக் குழப்பி விடவும் பார்க்கிறார்கள்.

ஏன் இப்படிச் செய்கிறார்கள் என்று யோசிக்கும்போது, இதில் ஏதோ வஞ்சகமான கபட நாடகம் இருக்கிறதோ என்றுகூடச் சந்தேகிக்கத் தோன்றுகிறது.

ரயில்வேத் தொழிலாளர்கள் தற்போது இந் நாட்டிலேயே மிகவும் கட்டுப்பாடு வாய்ந்தவர்களாக இருக்கிறார்கள் அல்லவா? எப்படியாவது அவர்களை வேலை நிறுத்தம் செய்யும்படி தூண்டி விட்டு, பிறகு அதை உடைத்து, ரயில்வேத் தொழிலாளரின் கட்டுப்பாட்டை ஒரு வழியாகக் குலைத்து விடுவதற்காகவே இப்படி வீண் பிடிவாதம் பிடிக்கிறார்களோ என்றுகூடத் தோன்றுகிறது.

ரயில்வே போர்டின் பிடிவாதத்தின் நோக்கம் எதுவாயிருந்தாலும் அவர்கள் விரிக்கும் வலையில் பொது ஜனங்கள் விழுந்துவிடக் கூடாது.

ரயில்வேத் தொழிலாளரையும் பொதுஜனங்களையும் பிரித்துப் பேசிப் பிளவு உண்டு பண்ணும் முயற்சி அபத்தமானது; ஆபத்தானது.

ரயில்வேத் தொழிலாளர் ஏறக்குறையப் பத்து லட்சம் பேர்; அவர்க

---

.........ஆனால் ஆயிரக்கணக்கான பிரயாணிகள் உயிர் அவனுடைய கைக்குள் அடங்கியிருக்கிறது!





நாளெல்லாம் பாடுபட்டு உழைக்கும் இந்தக் காங்கிக் கூலிகளுக்கு மாதம் பன்னிரண்டு ரூபாய் பிரமாதமான சம்பளம் கிடைக்கிறது!

னுடைய குடும்பத்தையும் சேர்த்துப் பார்த்தால் 60 லட்சம் பேர் ஆவார்கள்.

இந்த 60 லட்சம் பேரைப் பொது ஜனங்களிடமிருந்து தனியே பிரித்தால், அதுபோலவே ஆலைத் தொழிலாளரைப் பிரிக்கலாம்; விவசாயத் தொழிலாளரைப் பிரிக்கலாம்; வர்த்தகத் தொழிலாளரைப் பிரிக்கலாம்; ஓட்டல் தொழிலாளிகளைப் பிரிக்கலாம்; ஆபீஸ் தொழிலாளிகளைப் பிரிக்கலாம்; இப்படிப் பிரித்துக் கொண்டே போனால் அப்புறம் பொதுஜனங்கள் என்பது யார்?

ரயில்வேத் தொழிலாளர் பொதுமக்களிடமிருந்து தனியே பிரிக்க முடியாதவர்கள்; ரயில்வேத் தொழிலாளரின் சுகதுக்கங்கள், வெற்றி தோல்விகள் ஆகியவற்றில் பொது ஜனங்களும் பாத்தியப் பட்டவர்களே யாவர்.

* * *

ஜூன் 27ல். இந்திய தேசத்துக்கு ஒரு பெரிய கண்டம் என்று சொல்ல வேண்டும்.

அன்று தேசமெங்குமுள்ள பத்து லட்சம் ரயில்வேத் தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்யப் போவதாக நோட்டீசு கொடுத்திருக்கிறார்கள்.

அதற்குள் சமரசம் ஏற்படா விட்டால் 27ல் அன்று 41,000 மைல் நீளமுள்ள ரயில் பாதைகளில் ரயில் ஓடாது.

தேசமும் தேசமக்களும் எத்தனையோ கஷ்டங்களை அடைவார்கள்.

அத்தகைய விபரீதத்துக்குத் தேசத்தை உள்ளாக்க வேண்டாமென்று ரயில்வே போர்டையும் இந்தியா கவர்ன்மெண்டையும் கேட்டுக் கொள்கிறோம்.

ரயில்வேத் தொழிலாளரின் வெகு நியாயமான கோரிக்கையை ஒப்புக் கொண்டு அட்ஜூடிகேடரை நியமிக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறோம்.

*

புது டில்லியில் தற்சமயம் நமது தலைவர்கள் இடைக்கால தேசிய கவர்ன்மெண்டு அமைப்பது குறித்துப் பேசி வருகிறார்கள் என்பதை நாம் மறந்து விடவில்லை.

அத்தகைய இடைக்கால தேசிய சர்க்கார் ஏற்படுமானால், அப்போது நிலைமையே அடியோடு மாறிப் போய் விடும்; ரயில் வேலை நிறுத்தம் என்ற பேச்சே எழுவதற்கு இடமிராது.

# வட்ட மேஜை

8—6—46.

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

பஞ்சத்தைப் போக்க வேண்டிக் கிணறு வெட்டுவதற்காக இந்தத் தாலுகா விவசாயிகளுக்கு சர்க்கார் ரூ. 310—0—0 கொடுக்கிறார்கள். இதைப் பெறுவதற்கு, "இந்த விவசாயி கிணறு வெட்டுவதற்குத் தகுதியுள்ளவன்" என்று அத்தாட்சி கொடுப்பதற்காகக் கிராம முனிசீப்புக்கு ரூ. 15—0—0 கொடுக்க வேண்டும்; மேற்படி மனுவை விசாரித்துப் பணத்துக்கு 'சாங்ஷன்' செய்கிற இன்ஸ்பெக்டருக்கு ரூ. 15—0—0 கொடுக்க வேண்டும்; கஜானாவிலிருந்து ரூபாயை வாங்கிக்கொண்டு வெளியேறும்போது, அங்குள்ள சேவகர்களுக்கு ரூ. 3—0—0 கொடுக்க வேண்டும்; பட்டிக் காடுகளிலுள்ள குடியானவர்கள் பணம் வாங்குவதற்காகத் தாலுகா டவுனுக்கு இரண்டு மூன்று முறை நடக்கவேண்டியிருக்கிறது—அதற்குப் படிச் செலவு ரூ. 7—0—0. ஆக ரூ. 310—0—0ல் செலவு போக மீதி ரூபாய் 270—0—0. உணவுப் பொருள்களின் விலை கூடுதலாக இருப்பதால், கிணறு வெட்டும் கூலியாட்கள் ஒரு சதுர கெஜத்திற்கு ரூபாய் 3—0—0 கூலி கேட்கிறார்கள். இந்த நிலையில் மேற்படி ரூ. 270-0-0ஐக் கொண்டு எவ்வளவு அகலமும் ஆழமும் உள்ள கிணறு வெட்டலாமென்று பார்த்துக் கொள்ளுங்கள்.

பட்டிக் காடுகளிலுள்ள ரேஷன் கடைக்காரர்கள் அரிசியோ வேறு தானியமோ கொண்டுவர வேண்டுமானாலும் பிர்க்கா ரெவின்யூ ஆபீஸிடமிருந்து 'அத்தாட்சி' வாங்க வேண்டும். ஐம்பது மூட்டைகளுக்கு 'அத்தாட்சி' வாங்க வேண்டுமானால் மேற்படி ஆபீஸருக்கு மூட்டைக்கு ஒரு ரூபாய் வீதம் ஐம்பது ரூபாய் கொடுக்க வேண்டும். 'அத்தாட்சி'யில் கையெழுத்து வாங்குவதற்காகத் தாலுகா சப்ளை ஆபீஸருக்கு மூட்டை ஒன்றுக்கு ஒரு ரூபாய் வீதம் கொடுக்க வேண்டும். "செலவு அதிகம் ஆகிறதே. நாங்கள் என்ன விலைக்கு விற்பது?" என்று கேட்டால், "எப்படியாவது விற்றுக் கொள்ளுங்கள்; நாங்கள்தானே கணக்குப் பார்க்க வரப் போகிறோம்!" என்கிறார்கள். "வியாபாரிகளானதனால் எப்படி வாங்கினாலும் உங்களுக்கு லாபம்தானே?" என்றும் சொல்கிறார்கள். "பணம் கொடுக்க மாட்டோம்" என்றால், "அந்த ஊருக்கு அரிசி தேவையில்லை!" என்கிறார்கள்.

இந்த விஷயத்தில் தாங்களாவது ஏழைக் குடியானவர்களுக்காக இரங்கி, மேற்படி உத்தியோகஸ்தர்களைக் கண்டிப்பீர்களென்று நம்புகிறோம். காங்கிரஸ் ஆட்சி நடக்கும் இப்பொழுதாகிலும் லஞ்சப் பேய் ஒழியட்டும்!

இப்படிக்கு,

ஏழைக் குடியானவர்கள்.

[மாகாணங்களில் இப்போது காங்கிரஸ் சர்க்கார் நடைபெறுவதால், நேயர்கள் இம்மாதிரி புகார்களை மொட்டைக் கடிதங்களாக எழுதவேண்டிய அவசியமில்லை. காங்கிரஸ் மந்திரிகளுக்கு நேரிடையாகவே கையெழுத்துப் போட்டுக் கடிதம் எழுதலாம்; அல்லது அந்தத் தாலுக்கா சட்டசபைப் பிரதிநிதிக்குத் தெரியப்படுத்திப் பரிகாரம் பெறலாம். —ஆசிரியர்.]

# வானசஞ்சாரம்

**இசைத்தேனீ**

சென்ற வாரத்திய மூன்று ஸீனியர் வித்வான்களின் பெரிய கச்சேரிகளில் 10ம் திருச்சியில் நடந்த கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளையின் வயலின் வாத்தியம் தனி சிறந்து விளங்கியது. அவர் வாசித்த ஐந்து ராகங்களிலும் ஒரு ராகமாலிகையிலும் ஆனந்தபைரவி அழகு வடிவமாய் எல்லாவற்றிற்கும் மேலாயிருந்தது. உருப்படிகளும் ஸ்வரப்ரஸ்தாரங்களும் ராக பாவம் நிறைந்திருந்தன.

8ம் சென்னையில் பாடிய பாலுப் பள்ளி ராமகிருஷ்ணைய பந்துலுவின் சாரீரம் வர வர சஞ்சாரம் குறைந்து வருவதை ரஸிகர்கள் கவனித்திருப்பார்கள். ஞான பலத்தினாலும், சாதகச் சிறப்பினாலும் முழு நேரக் கச்சேரியைச் சமாளித்தார் எனலாம். ஜனரஞ்சனி, ஆரபி, தோடி இவைகளுக்குப் பின் காம்போதியை விஸ்தாரமாய் ஆலாபனை செய்து தானம் பல்லவிகளையும் நிறம்பட வழங்கினார்.

6ம் திருச்சியில் முடிகொண்டான் வெங்கடராமய்யர் வழக்கம்போல் எல்லாவற்றையும் உழைத்துப் பாடித் தனது ஞானச் சிறப்பை விளக்கினார். பூர்விகல்யாணி, மோஹனம் இவை தவிர சுத்த பைரவி என்ற அசாதாரண ராகமும், அதில் 'விஹார மானஸ' என்ற கிருதியும், 'பேரும் நல்ல' என்ற உருப்படியில் திரவல் ஸ்வரங்களும் தரமாயிருந்தன. சங்கதிகளை மட்டுக் கட்டி, நடுநடுவே சிறிது விச்ராந்தியுடன் கச்சிதமாகப் பாடுவாரானால் இவருடைய சங்கீதம் இன்னும் ரஸிக்கத் தக்கதாகும். சுத்த பைரவியை 'விந்து பைரவி' என்றும் ஒரு உருப்படிக்கான கன்னட கௌளையை 'ரீதி கௌள' என்றும் இவை போன்ற இன்னும் சில பிழைகளும் வானொலியில் கண்டிருப்பது குறிப்பிடத் தக்கது.

• • •

9ம் சென்னையிலும் திருச்சியிலுமாகப் பல கச்சேரிகள் முதல்தரமாய் வாய்ந்தது விசேஷம். அவைகளில் சென்னையில் நடந்த ருக்மணி ராஜகோபாலனின் கானத்துக்கே முதல் ஸ்தானம் கொடுக்க வேண்டும். காஹாரப்ரியாவும் இறுதி ராகமாலிகையில் கேதாரகௌளை, ஸிம்மேந்திர மத்யமம் ராகங்களும், 'பக்கல நிலபடி' கிருதியும் உயர்ந்த லக்ஷணப் பொருத்தங்களுடன் வசீகரமாயிருந்தன. அந்த நிலையத்தில் கே. வி. கிருஷ்ணனின் பாட்டும் குறிப்பிடத் தக்கது. நயசாரீரத்தில் நல்ல ஞான பாவத்துடன் கமாஸ் தோடி ராகங்களையும் 'ப்ரோசேவா ரெவருரா' 'கந்தன வாரிதி' கிருதிகளையும் நிறம்படக் கையாண்டார்.

கே. வி. கிருஷ்ணன்

அன்று சென்னையில் டி. கே. ராதாகிருஷ்ணனின் வேணுகானம் எதிர்பார்த்ததுபோல் உயர்ந்த ரகமாயிருந்தது. கல்யாணி, ஸஹானா, பல்லவி ராகமாம், காம்போதி இவைகள் வனப்பாயிழைந்து வந்தன.

அன்று திருச்சியில் பாடிய மாயவரம் எஸ். ராஜுமய்யர் சாரீர சம்பத்தும் சாதகச் சிறப்பும் கொண்ட முன்னணி வித்வான்களில் ஒருவர். பேகட ஷண்முகப்ரிய காஹாரப்ரியா ராகங்கள் ஜோராயிருந்தன.

• • •

மற்றக் கச்சேரிகளில் 4ம் சென்னையில் பி. எஸ். வேதாசலம் செட்டியாரின் பாட்டைக் கேட்டவர்கள் அதில் அவருக்கு இயல்பான முடுக்குச் சற்றுக் குறைந்திருந்ததைக் கவனித்திருப்பார்கள். தொண்டையை மிகவும் அடக்கிப் பாடியதுபோல் கேட்டது. சங்கராபரணம் விஸ்தாரமாயும் அதில் தானம் தரமாயுமிருந்தன.

7ம் சென்னையில் வி. எம். கிருஷ்ணமூர்த்தி நய சாரீரமும் கலைமுதியும் கொண்டு பாடிய தோடியும் 'தாமதமேன் சாமி' 'ஓ ஜகதம்பா' கிருதிகளும் அழகாயிருந்தன.

10ம் திருச்சியில் கேட்ட ஒரு கானம் சிறப்பாயிருந்தது. பாடியவர் கே. ஜோஸப். நய சாரீரத்தில் நல்ல பிருகாவை வழியுடன் பைரவி, மத்யமாவதி, தோடி ராகங்களை தேர்ந்தவராய் வழங்கினார். 'சாகேதநகர' 'யாரோ இவர் யாரோ' 'ஸ்ரீ வெங்கடேசம்' உருப்படிகள் வனப்பாயிருந்தன.

---

## 'ஸ்டிரைக்' விஷயம்



முதல் மூட்டைப் பூச்சி:—இந்த ரயில்வே ஸ்டிரைக்கைப் பற்றி உன் அபிப்பிராயம் என்ன?

இரண்டாம் மூட்டைப் பூச்சி:—நான் இந்த ஸ்டிரைக்கைப் பலமாக ஆட்சேபிக்கிறேன்.

முதல் மூட்டைப் பூச்சி:—ஏன்?

இரண்டாம் மூட்டைப் பூச்சி:—அதனால் நமது ஆகார விஷயம் பாதிக்கப்படுமல்லவா?

---

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

### 145. ராம பாணங்கள் அறுபட்டன.

சூரன் வந்தான் என்றால், ஒரு பெருங் கடலையே உடன் கொண்டு வந்தான் என்று சொல்ல வேண்டும். எத்தனையோ விதமான ஆயுதங்கள். படை வீரர்களது தோள்கள் எல்லாம் ஒரே காடாகத் தோன்றியது. அவ்வளவும் ராமனது அம்புகளால் வெட்டுண்டு சின்னு பின்வ மாய்ப் போய் விட்டன.

கரன் 'பொல்லாத கரன்' 'கடுங்கரன்' என்றெல்லாம் பேர் வாங்கினவன். அவனை விடப் பொல்லாததாய்ப் போய் விட்டது ராம பாணம். அவனுக்கு வந்த கோபத்தை இப்படி அப்படி என்று சொல்ல முடியுமா?

அவன் நின்றது எங்கே, எப்படி என்பதையும் பார்க்க வேண்டும்:

கடுங்க ரன்ன னப்பெ யர்
படைத்த கழல் வீ ரன்.
அடங்க லும்அ ரக்கர் அழி
வுற்றிடஅ ழுன் றான்;
ஒடுங்க லில்நி ணக்கு ருதி
ஓதம் அதின் உள் ளான்,
நெடுங்க டலின் மந்த ரம்
எனத்த மியன் நின் றான்.

[கழல் வீரன்: வீரக் கழலை அணிந்த கரன்; அடங்கலும் அரக்கர் அழிவுற்றிட: அரக்கர் அத்தனை பேரும் அழிந்து போகவும்: அழுன்றான்: கோபாவேசம் கொண்டான். ஆனால் அவன் நிற்கிற நிலை எப்படி? ஒடுங்கல் இல்: மிக விசிவாய்ப் பரந்துள்ள: நிணக்குருதி ஓதம் அதின் உள்ளான்: கொழுப்பு கலந்த இரத்தப் பெருக்கின் மத்தியில் உள்ளவனாய்: நெடுங்கடலின் மந்தரம் என: ஒரே பரப்பாய் உள்ள கடலின் மத்தியில் அதைக் கடைவதற்காக உயர்ந்து பருத்து நிற்கும் மந்திர மலையை ஒத்து: தமியன் நின்றான்: தன்னந் தனியாய் நின்றான்.]

கண்ணிலிருந்து தீப் பொறி பறக்கிறது. வில்லில் இருந்து அம்புகள் பறக்கின்றன. தன் படையினர் வெட்டுண்டு சிந்திய இரத்தப் பெருக்கில் நின்றாலும் உள்ளத்தில் இன்ன சீகாபாக்கினி குறையவில்லை கழுகுகளும் காகங்களும் நெருங்கி, பறந்து வருகின்றன.

இத்தனைக் குள்ளுந்தான் வருகிறது கரனுடைய தேர்.

செங்கண் எரி சிந்த, வரி
விற்ப கழி சிந் தப்,
பொங்கு குரு திப்பு ணரி
உள்ப்பு கையும் நெஞ் சன்,—
கங்க மொடு காக மிடை
அக்க டலின் ஓ டும்
வங்கம் எனல் ஆய தொரு
தேரின் மிசை வந் தான்.

---

### பிரபல விவாகம்



திருச்சி சேஷாத்ரி பிரதர்ஸ் லிமிடெட் மானேஜிங் டைரக்டர் ஸ்ரீ வி. சேஷாத்ரி, O. B. E., அவர்களின் குமாரி சௌபாக்கியவதி சிவாமணிக்கும், கோட்டயம், ஸ்ரீ ஹைகோர்ட் எம். கிருஷ்ணய்யர் அவர்களின் குமாரர் சிரஞ்சீவி கே. ஸ்ரீனிவாசனுக்கும் சென்ற மே மாதம் 12-ம் தேதி மேற்படி விவாகம் இனிது நடந்தேறியது.

[குருதிப் புனல் உள்: ரத்த வெள்ளத்துக்குள்: புகையும் நெஞ்சன்: கொதிக்கும் உள்ளத்தவனும்; கங்கமொடு காக மிடை: கழுகும் காகமும் நெருங்கிப் பறக்கும்; வங்கம் எனல் ஆயதொரு: அந்த இரத்தக் கடலில் ஓடும் கப்பல் என்று சொல்லக் கூடிய ஒரு தேரின் மீது வந்தான் கரன்.]

யுக முடிவில் உலக மெல்லாம் வெந்தொழிந்து போகும்படி ஒரு பெருந் தீ வரும் என்று புராணங்கள் கூறும். அந்தப் பெருந் தீயைப் போல ஒரு பெருங் கோபாவேசத்தோடு வருகிறான் கரன். அருகில் அவன் வருவதற்கு முன்பாகவே ராமன் தன்னுடைய அம்புகளைச் சாவகாசமாகச் சோதித்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

செறுத்(து) இறுதி யில்ப்புவனி
 தீய எழு தீ யின்,
மறத்தின் வயி ரத்தொ ருவன்
 வந்த னுகு முந் தைக்,
கறுத்த மணிக் கண்டன் கட—
 வுள்சி லைக ரத் தால்
இறுத்த வனும் வெங்க ணைதெ—
 ரிந்த னன்ன திர்ந் தான்.

[இறுதியில் புவனியே செறுத்து எழு தீயின்: யுக முடிவில் உலக மெல்லாம் வெந்து போகும்படி அடர்ந்து எழும் ஊழித்தீயை ஒத்து; மறத்தின் வயிரத் தொருவன்: வீரம் விளைந்த வைரம் என்று சொல்லக் கூடிய கரன்; வந்து அணுகு முந்தை: கிட்டத்தில் வருவதற்கு முன்னதாகச் சாவகாசமாய்: கறுத்த மணிக் கண்டன்: நீல கண்டனான சிவ பெருமானது தெய்வ தனுசை; கரத்தால் இறுத்தவனும்: தன் மாவிடக் கையால் (மிதிலையில் சீதைக்காக) ஒடித்த ராமனும்; வெம் கணை தெரிந்தனன்: தன்னுடைய அம்பறாத் தூணியை எடுத்து அதில் கரனுக்குச் சரியான அம்பு எது என்று தேர்ந்து கொண்டு இருக்கும் நிலையினனும்: எதிர்த்தான்: கரனுக்கு எதிரில் நடந்து வந்தான்.]

அப்படி ராமன் தேர்ந் தெடுத்த அம்புகள் ஒன்பது. ஊழித் தீயைப் போல உலகத்தையே அழிக்க வல்லவை அந்த ஒன்பது பாணங்கள். அவைகளை ஏவினான் ராமன்.

ஊழி யெரி யில்க்கொ டிய
 பாய்ப கழி ஒன் பான்,
ஏழு லகி னுக்கும் ஒரு
 நாய கனும் எய் தான்;
சூழ்சு டர்வ டிக்க ணை
 அவற்றெ திர்தொ டுத் தே.
ஆழி வரி விற்க ரனும்
 அன்ன வைஅ றுத்தான்.

[ஊழிஎரியில் கொடிய: ஊழித் தீயைப் போல எதையும் அழிக்கவல்ல; பாய் பகழி ஒன்பான்: ஒரே வேகமாய்ப் பாயக்கூடிய ஒன்பது அம்புகளை: ஏழுலகினுக்கும் ஒரு நாயகனும் எய்தான்: ஏழு உலகத்திற்குமே ஒரு தனி நாயகன் என்று சொல்லக்கூடிய ராமனும் எய்தான்—எய்தவன் சாமானியப் பட்டவன் அல்ல; சூழ் சுடர் வடிக்கணை: நாலா பக்கமும் ஒளியை வீசுகிற கூரிய அம்புகள்; அவற்றெதிர் தொடுத்தே: ராமனது ஒன்பது அம்புகளுக்கும் எதிராகத் தொடுத்து; ஆழி வரி விற்கரனும்: சிங்கம் போன்ற வரியில் ஏந்திய கரனும்; அன்னவை அறுத்தான்: அந்த ராம பாணங்களை அறுத்து விட்டான்.]

எவ்வளவோ யோசனை செய்து ஒன்பது அரிய பாணங்களை எடுத்தான் ராமன். வெகு திறமையோடு எய்ததில் குறைவில்லை. அத்தகைய அம்புகளை அல்லவா கரன் அறுத்து விட்டான்! கரன் சாமான்யப் பேர்வழியாக இல்லை. இன்னும் என்ன செய்கிறான் பார்க்கலாம்.

## முன் ஜாக்கிரதை!




குருவிகளில் ஒன்று:—ஊரில் பஞ்சம் வரப்போவதாகப் பேசிக் கொள்கிறார்கள். ஆகையால், நாம் தானியங்களை இப்போதே பொறுக்கி வைத்துக் கொண்டு விடலாம்.

# சிவகாமியின் சபதம்

அத்தியாயம் 48

## கடைசிப் பரிசு

புத்த பிக்ஷு கையில் கத்தி எடுத்ததைப் பார்த்ததும் பரஞ்சோதி விரைவாகப் பின்னால் இரண்டு அடி எடுத்து வைத்துத் தமது உறையிலிருந்த வாளை உருவினார். அந்த க்ஷண நேரத்தில் அவருடைய மனதில் "ஆ! நமது உயிர் போயிற்று! எவ்வளவோ முயற்சிகள் செய்து கடைசியில் காரியம் சித்தியாகும் தருணத்தில் இந்தத் தவறு செய்து விட்டோமே?" என்ற எண்ணம் மின்னல் போல் தோன்றி மறைந்தது.

ஆ! இது என்ன? இந்த வஞ்சக நாகநந்தி ஏன் அந்தப் பக்கம் திரும்புகிறார்? யார் மேல் எறிவதற்காகக் கத்தியை ஓங்குகிறார்? ஆஹா! சிவகாமி தேவியின் மேல் எறிவதற்கல்லவா கத்தியைக் குறி பார்க்கிறார்? படு பாவி! பாதகா?......

யார் செய்த அதிர்ஷ்டத்தினாலோ நாகநந்தி ஓங்கிய கையுடன் அரை நிமிஷம் தயங்கி நின்றார். அந்த அரை நிமிஷத்தில் பரஞ்சோதி தமது வாளை ஓங்கிக் கத்தி பிடித்த புத்த பிக்ஷுவின் தோளை வெட்டினார். பிக்ஷுவின கத்தி குறி தவறி எங்கேயோ தூரப் போய் விழுந்தது. நாகநந்தியும் அடியற்ற மரம்போல் தரையில் விழுந்தார்.

* * *

எல்லையற்ற அந்தகார சமுத்திரத்தின் கர்ப்பத்திலேயிருந்து, மோனக் கடலின் அடிவாரத்திலிருந்து, சிவகாமி மேலே வந்துகொண்டிருந்தாள்.

கன்னங்கரிய இருளிலே திடீரென்று சிறு சிறு ஒளித் திவலைகள் தோன்றி சுழன்று சுழன்று வந்தன.

நிச்சப்தத்தின் மத்தியிலிருந்து ஸ்வரூபம் தெரியாத ஒரு சத்தம் எழுந்தது. முதலில் அது மெல்லியதாயிருந்து வர வரப் பெரிதாகிச் சமுத்திரத்தின் பேரிரைச்சல் போல் கேட்டது.

அந்தப் பெரிய அகண்டாகார சத்தத்தின் நடுவே சிறு சிறு ஒலிகள் விட்டு விட்டுக் கேட்கத் தொடங்கின.

அந்த வெட்டு ஒலிகள் சிறிது நேரத்துக்கெல்லாம் மனிதர்களின் பேச்சுக் குரலாக மாறின.

ஆ! இரண்டு குரல்கள் மாற்றி மாற்றிக் கேட்கின்றன. அவற்றில் ஒன்று சிவகாமிக்குத் தெரிந்த குரல். நாகநந்தி பிக்ஷுவின் அடி வயிற்றிலிருந்து கிளம்பி வரும் கம்மலான சிம்ம கர்ஜனைக் குரல்.

இன்னொரு குரலும் தெரிந்த குரல் போலத்தான் தோன்றுகிறது. ஆனால் யாருடையது?

* * *

சிவகாமி தன்னுடைய கண்ணிமைகள் இன்னும் மூடியிருக்கின்றன என்பதை உணர்ந்தாள்.

ஒரு பெரு முயற்சி செய்து கண்களை இலேசாகத் திறந்தாள்.

அப்போது அவள் முன்னால் தோன்றிய காட்சியானது, வியப்பையும் இரக்கத்தையும் பரபரப்பையும் பயங்கரத்தையும் ஒருங்கே அளித்ததோடு, இது தூக்கத்திலே காணும் கனவா அல்லது பிரமை கொண்ட உள்ளத்திலே தோன்றும் கற்பனைக் காட்சியா என்று சந்தேகிக்கவும் செய்தது.

கற்பாறையில் குடைந்தெடுத்த பௌத்த விஹாரம் ஒன்றில் தான்

தரையிலே கிடப்பதை உணர்ந்தான். மேடு பள்ளமான பாறைத் தளமானது தேகம் பட்ட இடமெல்லாம் சில்லிடும்படி குளிர்ந்திருந்தது.

அவன் கிடந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்தில் தரையிலே ஒருவர் விழுந்து கிடக்க, அவருக்குப் பக்கத்தில் சம்ஹார ருத்ரமூர்த்தியைப் போல் கையில் வாளுடன் ஒருவர் கம்பீரமாக நின்றார். இன்னும் சற்றுத் தூரத்தில் வாளும் வேலும் ஏந்திய வீரர்கள் பலர் முகத்தில் வியப்பும் ஆங்காரமும் குரோதமும் மரியாதையும் போட்டியிடும் பாவத்துடனே நின்றார்கள். அவர்களில் சிலர் ஏந்திக் கொண்டிருந்த தீவர்த்திகளிலிருந்து கிளம்பிய ஒளிப் பிழம்பும் புகைத் திரளும் அந்தக் குகை மண்டபத்தை ஒரு யமலோகக் காட்சியாகச் செய்து கொண்டிருந்தன.

பிரம்மாண்டமான சிலை வடிவில் யோக நிஷ்டையில் அமர்ந்திருந்த பகவான் புத்தர் மேற்படி காட்சியை அரைக் கண்ணாலே பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டிருந்தார்.

• • •

சிவகாமி தனக்கு முன் தோன்றியதெல்லாம் கனவா, பிரமையா அல்லது உண்மைக் காட்சிதானா என்ற சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்வதற்காக ஒரு தடவை கண்ணை மூடி மறுபடியும் திறந்தாள். உண்மைக் காட்சிதான் என்று அறிந்து கொண்டாள். கொஞ்சம் கொஞ்சமாக அறிவு தெளிவடைந்தது. சிந்தனா சக்தியும் ஏற்பட்டது. தரையில் கிடப்பது நாகநந்தி பிக்ஷு என்டதைக் கண்டாள். அவருக்கு அருகில் கம்பீரமாகக் கையில் வாள் ஏந்தி நிற்பவர் தளபதி பரஞ்சோதி என்பதையும் ஊகித்து உணர்ந்தாள்.

அவர்களைச் சுற்றிலும் சற்றுத் தூரத்தில் விலகி நிற்பவர்கள் தளபதியுடன் வந்த பல்லவ வீரர்களாய்த்தானிருக்க வேண்டும்.

ஆனால் எல்லாரும் இங்கே எப்படி வந்து சேர்ந்தார்கள்? தான் இவ்விடம் வந்தது எப்படி?......

ஸ்வரூபம் தெரியாமல் கேட்டுக் கொண்டிருந்த பேச்சுக் குரல்கள் தெளிவடைந்தன. நாகநந்தி சொல்லிக் கொண்டிருந்தார்:—

"அப்பனே! பரஞ்சோதி! நீ நன்றாயிரு! நீ மிக்க குணசாலி; மிக்க நன்றியுள்ளவன். உன்னை ஒரு சமயம் நாகப் பாம்பு தீண்டாமல் இந்தக் கை காப்பாற்றியது. உன்னைப் பல்லவன் சிறையிலிருந்து இந்தக் கை விடுதலை செய்தது. நீ ஆச்சாரியராகக் கொண்ட ஆயனச் சிற்பியாரின் உயிரை இந்தக் கை ரட்சித்தது. அவருடைய மகள் சற்று முன்னால் காபாலிகையின் கத்திக்கு இரையாகாமல் காப்பாற்றியது. அப்படிப்பட்ட என் வலது கையை நீ வெட்டி விட்டாய். அடியோடு துண்டித்து விட்டாய்! ஆஹா! ரொம்பவும் நன்றியுள்ள பிள்ளை நீ!..."

அப்போது பரஞ்சோதி குறுக்கிட்டுப் பேசினார்:—"ஆஹா! கள்ள பிக்ஷுவே! உம்முடைய திருக்கரத்தின் அற்புத லீலைகளை ஏன் நடுவிலே நிறுத்தி விட்டீர்? மகேந்திர பல்லவர் மீது விஷக் கத்தியை எறிந்தது அந்தக் கைதானே? சற்று முன்னால் ஆயனர் குமாரியைத் தூக்கிக்கொண்டு சுரங்க வழியினால் நீர் ஓடப் பார்த்ததும் அந்தக் கையின் உதவியினால்தானே? தப்பி ஓட வழியில்லையென்று தெரிந்ததும் சிவகாமி தேவியின் பேரிலேயே உமது கொடூரமான விஷக் கத்தியை எறியப் பார்த்ததும் அந்தக் கைதான் அல்லவா?"

"ஆமாம், அப்பனே! ஆமாம்! நீ சொல்வதெல்லாம் உண்மைதான். ஆனால் எதற்காக ஆயனர் மகளை நான் கொண்டு போக முயற்சித்தேன்? தெரிந்து கொண்டாயா? ஆ! பரஞ்சோதி! ஆயனர் மகள் மீது என்னைக்

காட்டிலும் உனக்கு அதிக அன்பு, அதிக பக்தி, அதிக சிரத்தை என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்! உன் எஜமானனான அந்த மூட மாமல்லனும் அவளை என்னைக் காட்டிலும் அதிகம் காதலிப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறான் ...... அப்பனே! அன்பு என்பதற்கு உனக்கு அர்த்தம் தெரியுமா? உன் தலைவன் மாமல்லனுக்குக் காதலின் இயல்பு தெரியுமா? ...... பரஞ்சோதி! இன்று இந்த வாதாபி நகரம் பற்றி எரிந்து நாசமாவதற்குக் காரணமானவன் நான். சிவகாமிக்காக என் சொந்தச் சகோதரனைப் பலி கொடுத்தேன். ஹர்ஷவர்த்தனனை நடுநடுங்கச் செய்த சளுக்க மகா சாம்ராஜ்யத்தையே பலியாக அர்ப்பணம் செய்தேன். ஆஹா! அன்புக்கும் காதலுக்கும் அர்த்தம் உங்களுக்கு என்ன தெரியும்?”

“அடிகளே! தாங்கள் சொல்வது உண்மையே. அன்பு என்பதற்கு அர்த்தம் எனக்குச் சற்று முன்னால்தான் தெரிந்தது. அன்பு என்றால் விஷம் தோய்ந்த கத்தி என்று அர்த்தம். ஒருவரிடம் நம்முடைய அன்பைக் காட்டுவதென்றால் அவர்மேல் விஷக் கத்தியை எறிந்து கொல்ல வேண்டும்!......இதையெல்லாம் சற்று முன்னால் நான் தெரிந்து கொண்டேன். வஞ்சக பிக்ஷுவே! உம்மிடம் பேசிக் கொண்டிருக்க எனக்கு நேரமில்லை. உம்முடைய வேஷத்தை மட்டும் கலைக்காமல் நீர் இராஜரீக உடை தரித்திருந்தால் இத்தனை நேரம் உம்மைப் பரலோகம் அனுப்பியிருப்பேன். காவி வஸ்திரம் தரித்த பிக்ஷுவைக் கொல்ல மனம் வரவில்லை. ஒரே ஒரு நிபந்தனையின் பேரில் உம்மைக் கொல்லாமல் விடுகிறேன். பத்து வருஷத்துக்கு முன்னால் அஜந்தா வர்ண இரகசியத்தை அறிந்து வருவதற்காக ஆயனர் என்னை அனுப்பினார். நானும் அப்படியே செய்வதாக வாக்களித்து விட்டுக் கிளம்பினேன். அஜந்தா வர்ணத்தின் இரகசியம் உமக்கு அவசியம் தெரிந்திருக்க வேண்டும். இதோ இந்தச் சுரங்க விஹாரத்தின் சுவர்களிலேகூட வர்ண சித்திரங்களைக் காண்கிறேன். உமக்குக் கட்டாயம் இந்த இரகசியம் தெரிந்துதானிருக்க வேண்டும். அதை உடனே சொன்னீரானால் உம்மை உயிரோடு விடுகிறேன். இல்லாவிடின் உமது இஷ்ட தெய்வத்தை ...... உம்மைப் போன்ற கிராதகனுக்குத் தெய்வம் என்பதாக ஒன்றிருந்தால் அந்தத் தெய்வத்தைப் ............ பிரார்த்தனை செய்து கொள்ளும்!”

“அப்பனே! உன்னுடைய கருணைக்காக மிக்க வந்தனம். என் இஷ்ட தெய்வம் ஒன்றே ஒன்றுதான். அது சிவகாமிதான். அந்த தெய்வத்தைப் பிரார்த்தித்துக் கொள்கிறேன். ஆயனரையும் அவர் மகளையும் அஜந்தாவுக்கே அழைத்துப் போய் அழியா வர்ண இரகசியத்தை நேரிலேயே காட்டிக் கொடுக்க வேண்டும் என்று எண்ணியிருந்தேன். அது எனக்கும் கொடுத்து வைக்கவில்லை; அவர்களுக்கும் கொடுத்து வைக்கவில்லை. அந்த அற்புதமான இரகசியத்துக்கு — உலகத்தில் வேறு யாரும் கற்பனை செய்ய முடியாத இரகசியத்துக்கு — என்னுடைய உயிரை ஈடாக வைத்தாயே! நீ நன்றாயிருக்க வேண்டும்! சொல்கிறேன், கேள். மரஞ் செடிகளின் இலை, வேர், காய், விதை முதலிய தாவரப் பொருள்களைச் சாறு பிழிந்து காய்ச்சிச் சாதாரணமாக வர்ணங்கள் குழைப்பது வழக்கம். தாவரங்கள் காய்ந்து உலர்ந்து அழிந்து போகக் கூடியவை. ஆகையால் அவற்றிலிருந்து உண்டாக்கப்படும் வர்ணங்களும் சீக்கிரத்தில் மங்கி அழிந்து போகின்றன. ஆனால் மலைகளிலும் பாறைகளிலும் சிற் சில பகுதிகள் இயற்கை வர்ணம் பெற்று விளங்குகின்றன. இந்த வர்ணங்கள் காற்றுக்கும் வெய்யிலுக்கும் மழைக்கும் மங்குவதில்லை; அழிவதில்லை. ஆகவே, இந்த வர்ணப் பாறைகளைப் பொடி செய்து அதற்கேற்ற பக்குவப்படி அரைத்துக் குழைத்து உண்டாக்கும் வர்ணங்கள் அழிவதே கிடையாது. இம்மாதிரி வர்ணப் பாறைகளைப் பொடித்துக் குழைத்த வர்ணங்களைக் கொண்டுதான் அஜந்தா சித்திரங்கள் தீட்டப்பட்டிருக்கின்றன ... ...... பரஞ்சோதி! சென்ற ஐந்நூறு வருஷ காலமாக அஜந்தா சங்கிராமத்தைச் சேர்ந்த பிக்ஷுக்களைத் தவிர வேறு யாரும் அறியாத இரகசியத்தை உனக்கு நான் சொல்லி விட்டேன். இனி நான் போகலாமா?”

"அடிகளே! உடனே போய் விடுங்கள். அடுத்த நிமிஷம் என் மனம் மாறினாலும் மாறி விடும். சிவகாமி தேவியுடன் நீர் ஓடிப்போக யத்தனித்த கள்ளச் சுரங்க வழியாகவே போய் விடுங்கள். சீக்கிரம்! சீக்கிரம்!"

நாகநந்தி மிக்க பிரயாசையுடன் எழுந்திருந்தார். வெட்டுப் பட்ட வலது கையை இன்னொரு கையினால் தூக்கிப் பிடித்துக் கொண்டு நின்றார்.

"பரஞ்சோதி! நீ நல்ல பிள்ளை. என் உயிரைத் தப்பித்து விட்டாய். என் கையை வெட்டியதற்குப் பதிலாகக் கழுத்தை வெட்டியிருந்தாயானால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும். ஆனால் எனக்கு இன்னும் உயிர்மேல் ஆசை விடவில்லை. உன்னிடம் உயிர்ப் பிச்சை கேட்டேன். நீயும் கொடுத்தருளினாய். மாமல்லன் வருவதற்குள்ளே நான் போய் விடவேண்டுமென்பது உன் கருத்து என்பதை அறிந்து கொண்டேன். இதோ போய் விடுகிறேன். ஆனால் இன்னும் ஒரே ஒரு கோரிக்கை. சிவகாமி சிறிது நேரத்தில் மூர்ச்சை தெளிந்து எழுவாள். அவளிடம் ஒரு விஷயம் அவசியம் தெரியப்படுத்து. அவள் மேல் நான் விஷக் கத்தியை எறிந்து கொல்ல முயன்றேன் என்பதைக் கட்டாயம் சொல்லு! அதுதான் அவள் பேரில் நான் கொண்ட காதலின் கடைசிப் பரிசு என்றும் சொல்லு!......"

இவ்விதம் கூறிக் கொண்டே நாகநந்தி சிவகாமி கிடந்த பக்கம் நோக்கினார். சிவகாமி மூர்ச்சை தெளிந்து எழுந்திருந்து பாறைத்தூணின் பேரில் சாய்ந்து சிலையைப் போல் அசைவற்று நிற்பதைப் பார்த்தார்.

"ஆ! சிவகாமி! எழுந்து விட்டாயா? ஆயனரின் சீடர் பரஞ்சோதியிடம் நான் சொன்னது உன் காதில் விழுந்ததா? ஆம்; உன் மீது கத்தி எறிந்து கொல்லப் பார்த்தேன். எதிர்காலத்தை நினைத்து உன் மேல் இரக்கங் கொண்டுதான் அந்தக் காரியத்தைச் செய்ய முயன்றேன். பல்லவ சேனாபதி குறுக்கே வந்து உனக்கு அந்த நன்மையை நான் செய்ய முடியாமல் தடுத்து விட்டார். சிவகாமி! வருங் காலத்தில்...... வேண்டாம்; வருங் காலத்தில் என்னை நீ நினைக்க வேண்டாம். இந்தப் பாவியை மறந்து விடு! உடல் பொருள் ஆவி அனைத்தையும் இகத்தையும் பரத்தையும் உன் காலடியில் அர்ப்பணம் செய்த இந்தக் கள்ள பிக்ஷுவை மறந்துவிடு. மறந்து விட்டுக் கூடுமானால் சந்தோஷமாயிரு! ஆனால் நான் மட்டும் உன்னை மறக்க மாட்டேன். என் உடலில் உயிர் உள்ளவரையில் உன்னை மறக்க மாட்டேன்! பரஞ்சோதியையும் மாமல்லனையும் கூட மறக்க மாட்டேன்! போய் வருகிறேன், சிவகாமி! போய் வருகிறேன். உன்னைப் புத்த பகவான் காப்பாற்றட்டும்!"

இவ்விதம் பேசிக் கொண்டே தள்ளாடித் தள்ளாடி நடந்து நாகநந்தி பிக்ஷு புத்த பகவானுடைய சிலைக்குப் பின்னால் மறைந்தார்.

நாகநந்தி அவ்விதம் தப்பிச் சென்று சுரங்க வழியில் மறைந்ததை அனைவரும் பார்த்துக் கொண்டு நின்றார்கள். சேனாபதியின் அநுமதியின் பேரிலேயே பிக்ஷு செல்கிறார் என்பதை அறிந்திருந்தபடியால் யாரும் அவரைத் தடுக்க முயலவில்லை.

சிவகாமியும் பார்த்த கண் பார்த்த வண்ணம் நாகநந்தி மறையும் வரையில் அவரையே நோக்கிக் கொண்டு நின்றாள். சற்று முன்னால் காபாலிகையின் கத்திக்கு இரையாகாமல் அவர் தன்னைக் காப்பாற்றியபோது அவர் புலிகேசி சக்கரவர்த்தியா அல்லது நாகநந்தி பிக்ஷுவா என்று அவள் ஐயமுற்றாள். இப்போது அவர் மனிதனா, மனித உருக் கொண்ட அரக்கனா, ஏதோ பெரும் துக்கத்தினால் மூளை சிதறிப்போன பைத்தியக்காரனா, அல்லது ஈவு இரக்கமற்ற கொடிய கிராதகக் கொலைகாரனா என்னும் சந்தேகங்கள் அவள் மனதில் தோன்றி அலைத்தன.

இதற்கிடையில் சேனாபதி பரஞ்சோதி, "சத்ருக்னா! நல்ல சமயத்தில் வந்தாய்! இந்தப் பாதாள புத்த விஹாரத்திலிருந்து வெளியேறுவதற்கு ஏதாவது நல்ல மார்க்கம் இருக்கிறதா என்று பார். நாங்கள் வந்த கிணற்றுச்

சுரங்க வழியாக எல்லாரும் போவது கஷ்டம். பிரதான வாசல் எங்கேயாவது இருந்து அடைபட்டிருக்க வேண்டும். சீக்கிரம் கண்டு பிடி!'' என்றதும், சத்துருக்னன், ''சேனாபதி! பிரதான வாசலை ஏற்கனவே கண்டு பிடித்து விட்டேன். அந்த வழியைத் திறப்பதற்கு இதோ கட்டளை யிடுகிறேன்!'' என்றான்.

சேனாபதிக்குச் சட்டென்று ஒரு நினைவு வந்தது. ''சத்ருக்னா! குண்டோதரன் எங்கே?'' என்று கேட்டார்.

''ஆ! சேனாபதி! என் அருமைச் சீடர்களில் அருமைச் சீடன், காபாலி கையின் கத்திக்கு இரையாகி விட்டான்! அந்த ராட்சஸியைக் குகையில் காணாமல் சுரங்க வழியிலே தேடிக் கொண்டு வந்தோம். தாங்கள் அந்தச் சண்டாளியைப் பார்த்தீர்களா?'' என்று சத்ருக்னன் கேட்க, ''பார்த்தேன், சத்ருக்னா! கண்ணனும் காபாலிகையும் பக்கத்து விட்டில் செத்துக் கிடக்கிறார்கள். கண்ணன் எப்படிச் செத்தான் என்பது தெரியவில்லை! அங்கே போய்ப் பார்க்க வேண்டும்'' என்றார்.

பரஞ்சோதி இவ்விதம் சொல்லிக் கொண்டே தூணின் மேல் சாய்ந்து



நின்று கொண்டிருந்த சிவகாமியின் அருகிலே சென்று பக்தியுடன் வணங்கினர்.

"அம்மணி! எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டும் கேட்டுக்கொண்டும் இருந்தீர்கள். ஏகாம்பரர் அருளால் எல்லா அபாயமும் தீர்ந்தது. ஒன்பது வருஷத்துக்குப் பிறகு தங்களை மறுபடியும் உயிருடன் பார்க்க முடிந்தது. சிறிது நேரம் உட்கார்ந்து இளைப்பாறுங்கள்! இந்தக் குகையின் வாசல் திறந்ததும் வெளியேறலாம். தங்கள் தந்தையும் சக்கரவர்த்தியும் கோட்டைக்கு வெளியே காத்துக் கொண்டிருக்கிறார்கள்!" என்றார்.

சிவகாமி துக்கம் நெஞ்சை அடைக்க, நாத் தழுதழுக்க, "தளபதி! போவதற்கு முன்னால் எனக்குக் கமலியின் கணவரை மறுபடியும் பார்க்க வேண்டும். என்னை அங்கே அழைத்துப் போங்கள்!" என்றாள்.

அதே சமயத்தில், அடைக்கப்பட்டிருந்த விஹாரத்தின் பிரதான வாசலைப் பல்லவ வீரர்கள் படார் படார் என்று இடித்துத் தள்ளிக் கொண்டிருந்தார்கள்.



## அத்தியாயம் 49

# சிம்மக் கொடி

உயிர்க் களை இழந்து மரணத்தின் அமைதி குடிகொண்டிருந்த கண்ணபிரானுடைய முகத்தைப் பார்த்த வண்ணம் சிவகாமி கண்ணீர் விட்டுத் தேம்பிக் கொண்டிருந்தாள்.

"அம்மா! எத்தனை நேரம் அழுது புலம்பினாலும் கண்ணனுடைய உயிர் திரும்பி வரப்போவதில்லை. யுத்தம் என்றால் அப்படித்தான். கண்ணபிரான் ஒருவன்தானா இறந்தான்? இவனைப்போல் பதினாயிரக் கணக்கான வீரர்கள் பலியானார்கள். தயவு செய்து கிளம்புங்கள். இந்த வீட்டுக்குப் பக்கத்தில் தீ வந்துவிட்டது" என்று பரஞ்சோதி கூறினார்.

கண்ணீர் ததும்பிய கண்களினால் சிவகாமி அவரைப் பரிதாபமாகப் பார்த்து, "தளபதி! யுத்தம் வேண்டாம் என்று தங்களுக்கு ஓலை எழுதி அனுப்பினேனே?" என்று விம்மினாள்.

"ஆம், தேவி! யுத்தத்தைத் தடுப்பதற்கு நானும் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தேன். என் முயற்சி பலிதமாகும் சமயத்தில் அந்தக் கள்ள பிக்ஷு வந்து எல்லாக் காரியத்தையும் கெடுத்து விட்டார். வாதாபி நகரம் அழிய வேண்டும் என்று விதி இருக்கும்போது யார் என்ன செய்ய முடியும்?"

"தளபதி! விதியின் பேரில் என்ன குற்றம்? எல்லாவற்றிற்கும் காரணம் இந்தப் பாதகிதான். அன்றைக்குத் தாங்களும் அவரும் வந்து எவ்வளவோ பிடிவாதமாக என்னை அழைத்தீர்கள். மூர்க்கத்தனத்தினால் 'வரமாட்டேன்' என்று சொன்னேன்......"

"தேவி! எவ்வளவோ காரியங்கள் வேறு விதமாக நடந்திருக்கலாம். அதையெல்லாம் பற்றி இப்போது யோசித்து என்ன பயன்? தயவு செய்து புறப்படுங்கள். அவரும் தங்கள் தந்தையும் தங்களைப் பார்க்க ஆவலுடன் காத்துக் கொண்டிருப்பார்கள்......"

"தளபதி! அவருடைய முகத்தில் நான் எப்படி விழிப்பேன்? முடியாது; என்னால் முடியாது. நான் இங்கேயே இருந்து உயிரை விடுகிறேன். ஆயிரந் தடவை மன்னிப்புக் கேட்டுக்கொண்டதாக அவரிடம் சொல்லுங்கள்!" என்று சிவகாமி சொல்லிக் கொண்டிருக்கும்போது, வாசலில் ஏதோ பெரும் சத்தம் கேட்டது.

சற்று நேரத்துக்கெல்லாம் மாமல்லர் உள்ளே வந்தார். அவருக்குப் பின்னால் ஆயனரும் வந்தார்.

"ஆ! இதோ அவரே வந்து விட்டார்!" என்று பரஞ்சோதி வாய்விட்டுக் கூறி, மனதிற்குள் "இத்துடன் என் பொறுப்புத் தீர்ந்தது!" என்று சொல்லிக் கொண்டார்.

"அவரே வந்து விட்டார்!" என்ற வார்த்தைகள் காதில் விழுந்ததும் சிவகாமியின் தேகம் புல்லரித்தது. குனிந்திருந்த தலையை நிமிர்த்தி வாசற் பக்கம் பார்த்தாள். கண நேரத்திலும் மிகச் சிறிய நேரம் மாமல்லருடைய கண்களும் சிவகாமியின் கண்களும் சந்தித்தன.

அவ்வளவுதான்; சொல்ல முடியாத உணர்ச்சி பொங்கச் சிவகாமி மறுபடியும் தலை குனிந்தாள். அவளுடைய அடிவயிற்றிலிருந்து ஏதோ கிளம்பி மேலே வந்து பார்வையும் தொண்டையையும் அடைத்துக் கொண்டு மூச்சு விட முடியாமலும் தேம்பி அழுவதற்குக்கூட முடியாமலும் செய்தது.

அப்புறம் சிறிது நேரம் அங்கு என்ன நடந்ததென்றே அவளுக்குத் தெரியாமலிருந்தது.

"ஆ! கண்ணபிரானா? ஐயோ!" என்று அவளுடைய தந்தையின் குரல் அலறுவது காதில் விழுந்ததும் உணர்வு பெற்றாள்.

"ஆமாம்; கண்ணன்தான்! கமலியின் சகோதரியைச் சிறை மீட்டு ரதத்தில் வைத்து அழைத்து வர வந்த கண்ணபிரான்தான் மார்பில் விஷக்கத்தி பாய்ந்து செத்துக் கிடக்கிறான். ஆயனரே! உம்முடைய மகளைக் கேளும்; அவளுடைய சபதம் நிறைவேறி விட்டதல்லவா? அவளுடைய உள்ளம் குளிர்ந்து விட்டதல்லவா?

தேவியார் இனிமேல் இந்த நகரத்தை விட்டு வெளிக் கிளம்பலாமல்லவா? கேளும், ஆயனரே! கேளும்!"

மாமல்லரின் மேற்படி வார்த்தைகள் சிவகாமியின் காதில் உருகிய ஈயத் துளிகள் விழுவதுபோல் விழுந்தன. ஆஹா! இந்தக் குரலானது எத்தனை அன்பு ததும்பும் மொழிகளை, இன்பத் தேன் ஒழுகும் வார்த்தைகளை ஒரு காலத்தில் சொல்லியிருக்கிறது? அதே குரலில் இப்போது எவ்வளவு கர்ண கடூரமான சொற்கள் வருகின்றன? ஆஹா! இதற்குத்தானா இந்த ஒன்பது வருஷ காலமும் பொறுமையுடன் உயிரைக் காப்பாற்றிக் கொண்டு வந்தோம்?

மாமல்லரின் கொடுமையான வார்த்தைகள் பரஞ்சோதிக்கும் துன்பத்தை உண்டாக்கின. "சக்கரவர்த்தி! சிவகாமி தேவி ரொம்பவும் மனம் நொந்து போயிருக்கிறார்......" என்று அவர் சொல்வதற்குள் மாமல்லர் குறுக்கிட்டு, "தேவியார் எதற்காக மனம் நோகவேண்டும்? இன்னும் என்ன மனக் குறை? வீரத் தமிழ் மகளின் சபதந்தான் நிறைவேறிவிட்டதே! சந்தேகமிருந்தால் வீதி வழியே போகும்போது பார்த்து நிச்சயப் படுத்திக் கொள்ளட்டும். வீடுகள் பற்றி எரிவதையும் வீதிகளில் எல்லாம் பிணங்கள் கிடப்பதையும் ஜனங்கள் அலறிப் புடைத்துக்கொண்டு ஓடுவதையும் பார்த்துக் களித்து ஆனந்திக்கட்டும். ஆயனச் சிற்பியாரே! உம்முடைய குமாரியை அழைத்துக் கொண்டு உடனே கிளம்பும்!"

சிவகாமியின் மார்பு ஆயிரம் சுக்கலாக உடைந்தது. அவளுடைய தலை சுழன்றது. அச்சமயம் நல்ல வேளையாக ஆயனர் அவள் அருகில் சென்று இரக்கம் நிறைந்த குரலில் "அம்மா, குழந்தாய்! என்னை உனக்குத் தெரியவில்லையா?" என்றார்.

"அப்பா!" என்று கதறிக்கொண்டே சிவகாமி தன் தந்தையைக் கட்டிக் கொண்டாள்.

* * *

அன்று அதிகாலையில் சேனாபதி பரஞ்சோதி வாதாபிக்குள் பிரவேசித்ததிலிருந்து மாமல்லருடைய உள்ளப் பரபரப்பு நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகமாகிக் கொண்டிருந்தது. சிவகாமிக்கு ஏதோ விபரீதமான அபாயம் நேரப் போகிறதென்றும் தாம் இங்கே வெறுமனே யிருப்பது பெரிய பிசகு என்றும் அவருக்குத் தோன்றி வந்தது. புலிகேசி சக்கரவர்த்தி அரண்மனையில் அகப்படவில்லை என்று மானவன்மரிடமிருந்து செய்தி வந்த பிறகு கோட்டைக்கு வெளியே அவருக்கு இருப்புக் கொள்ளவில்லை. ஆயனரையும் அழைத்துக் கொண்டு நகருக்குள் பிரவேசித்தார்.

மாமல்லர் நகரின் வீதிகள் வழியாகச் சென்றபோது, சிவகாமியைச் சந்தித்தவுடனே அவளிடம் அன்பான மொழிகளைக் கூற வேண்டுமென்பதாகத்தான் யோசனை செய்துகொண்டு சென்றார். ஆனால், அவருடைய அன்புக்கும் அபிமானத்துக்கும் பெரிதும் பாத்திரமாயிருந்த கண்ணபிரான் செத்துக் கிடந்ததைக் கண்டதும் மாமல்லரின் மனம் கடினமாகிவிட்டது. அதனால்தான் அத்தகைய கடுமொழிகளைக் கூறினார்.

சிவகாமி "அப்பா!" என்று அலறியவண்ணம் ஆயனரைக் கட்டிக் கொண்டதும் மாமல்லரின் உள்ளம் இளகிற்று. அவளை அழைத்துப் போகும் போது வழியில் நல்ல வார்த்தை சொல்லிச் சமாதானப் படுத்த வேண்டுமென்று எண்ணினார். ஆனால் அதற்கும் ஒரு இடையூறு ஏற்பட்டது.

ரதத்தில் ஆயனரும் சிவகாமியும் முன்னால் செல்ல, பின்னால் சற்றுத் தூரத்தில் மாமல்லரும் பரஞ்சோதியும் குதிரைகளின் மீது ஆரோகணித்துச் சென்றார்கள். மாமல்லரின் விருப்பத்தின்படி பரஞ்சோதி தாம் சிவகாமியின் வீட்டு வாசலை அடைந்ததிலிருந்து நடந்த சம்பவங்களையெல்லாம் விவரமாகச் சொன்னார். அதையெல்லாம் கேட்கக் கேட்கச் சக்கரவர்த்தியின் நெஞ்சில் குரோதாக்கினி கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது. முக்கியமாக நாகநந்தியைப் பரஞ்சோதி கொல்லாமல் உயிரோடு விட்டு விட்டார் என்பது மாமல்லருக்குப் பெருங் கோபத்தை உண்டாக்கியது. சிவகாமி

யின் நன்மைக்காக, அவனைப் பெருந் துன்பத்திலிருந்து பாதுகாப்பதற்காகவே அவனைக் கொல்ல யத்தனித்ததாக நாகநந்தி சொன்னாரல்லவா? அதைக் கேட்டபோது, அந்தக் கூற்றில் அடங்கியிருந்த உண்மையை மாமல்லரின் அந்தராத்மா உடனே உணர்ந்தது. அது காரணமாகவே, அவருடைய குரோதம் பன்மடங்கு அதிகமாகிக் கொழுந்து விட்டெரிந்தது.

சிவகாமி தன் அருமைத் தந்தையின் மீது சாய்ந்த வண்ணம் வாதாபி நகரின் பயங்கர வீதிக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டு சென்றாள். அந்த கோரங்களைப் பார்க்கச் சகியாமல் சில சமயம் கண்களை மூடிக் கொண்டாள். ஆனால் கண்களை மூடிக்கொண்டபோதிலும் காதுகளை மூடிக்கொள்ள முடியவில்லை. ஜுவாலை விட்டுப் பரவிய பெருந் தீயில் வீடுகள் பற்றி எரியும் சடசட சத்தமும், காற்றின் 'விர்' என்ற சத்தமும், குழந்தைகளின் கூக்குரலும், ஸ்திரீகளின் ஓலமும், சளுக்க வீரர்களைப் பல்லவ வீரர்கள் துரத்தி ஓடும் சத்தமும், ஜயகோஷமும் ஹாஹாகாரமும் அவளுடைய செவிகளை நிரப்பி அடிக்கடி கண்களைத் திறந்து பார்க்கச் செய்தன.

இந்த நிலையில் ஒரு முறை மாமல்லர் சிறிது முன்னேறி வந்து ரதத்தின் ஓரமாகக் குதிரையைச் செலுத்திக் கொண்டிருந்தபோது சிவகாமி அளவு கடந்த ஆவலுடன் அவர் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

ஆனால் மாமல்லரோ அவள் பக்கம் தம் பார்வையைத் திருப்பவேயில்லை. ஆயனர் முகத்தை நோக்கிய வண்ணம் "சிற்பியாரே! நாங்கள் எல்லாரும் இங்கிருந்து புறப்பட்டு வர இன்னும் ஒரு மாதம் ஆகலாம். உங்களுக்கு இஷ்டமிருந்தால் உம்மையும் உமது மகளையும் முன்னதாகத் தக்க பாதுகாப்புடன் காஞ்சிக்கு அனுப்பி வைக்கிறேன். அல்லது நாகநந்தி பிக்ஷு உம்மையும் உமது குமாரியையும் அஜந்தாவுக்கு அழைத்துப் போக விரும்புவதாகச் சொன்னாராம். அது உங்களுக்கு இஷ்டமானால் அப்படியும் செய்யலாம்!" என்றார்.

அத்தனை கஷ்டங்களுக்கும் யுத்த பயங்கரங்களுக்கும் இடையிலேயும் ஆயனருக்கு 'அஜந்தா' என்றதும் நாவில் ஜலம் ஊறியது. அஜந்தா வர்ண இரகசியத்தைப் பரஞ்சோதி நாகநந்தியிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட விவரம் இன்னும் ஆயனருக்குத் தெரியாது. எனவே அவர் சிவகாமியைப் பார்த்து, "அம்மா! உனக்கு என்ன பிரியம்? காஞ்சிக்குப் போகலாமா? அஜந்தாவுக்குப் போகலாமா?" என்றார்.

சிவகாமியின் உள்ளம் அந்த நிமிஷத்தில் வயிரத்தைவிடக் கடினமாகியிருந்தது. "அப்பா! நான் காஞ்சிக்கும் போகவில்லை; அஜந்தாவுக்கும் போகவில்லை. பல்லவ குமாரரை என் பேரில் கருணை கூர்ந்து அவர் கையிலுள்ள வாளை என் மார்பிலே பாய்ச்சி என்னை யமபுரிக்கு அனுப்பிவிடச் சொல்லுங்கள். பழைய அபிமானத்துக்காக எனக்கு இந்த உதவி செய்யச் சொல்லுங்கள்!" என்றாள்.

"ஆயனரே! உமது மகளுக்கு அத்தகைய உபகாரம் செய்ய என்னால் ஆகாது; நாகநந்தி பிக்ஷுவால்தான் முடியும்!" என்றார் மாமல்லர்.

இந்தச் சம்பாஷணையின் உட்கருத்து ஒன்றும் புரியாமல் திகைத்த ஆயனரின் மடிமீது சிவகாமி மறுபடியும் ஸ்மரணை யிழந்து விழுந்தாள்.

• • •

**மா**மல்லர் திரும்பிச் சென்று பரஞ்சோதியின் பக்கத்தை அடைந்தார். சிவகாமியின்மீது அத்தகைய குரூரமான சொல்லம்புகளைச் செலுத்திய பிறகு அவருடைய மனம் சிறிது அமைதி அடைந்திருந்தது. "நண்பரே! அதோ அந்த ஜயஸ்தம்பத்தை — புலிகேசியின் பொய் ஜயத்தின் அடையாளத்தைப் — பார்த்தீர் அல்லவா? ஒன்பது வருஷத்துக்கு முன்பு ஒரு நாள் நாம் அந்த ஸ்தம்பத்தின் அடியில் நின்று செய்துகொண்ட சங்கல்பம் ஞாபகமிருக்கிறதா? அதை இன்று நிறைவேற்றி விட்டோம். அந்தப் பொய் ஜயஸ்தம்பத்தை உடனே தகர்த்தெறிந்து விட்டு நம்முடைய உண்மை ஜயஸ்தம்பத்தை நாட்டச் செய்யுங்கள். புதிய ஜய ஸ்தம்பத்தில் பல்லவ சேனையின் வெற்றிக் கொடி வானளாவப் பறக்கட்டும்! மகத்தான இந்த வெற்றிக்கு அறிகுறியாக நமது கொடியிலும் விருதுகளிலும் உள்ள ரிஷப சின்னத்தை மாற்றிச் சிம்ம சித்திரத்தைப் பொறிக்கச் செய்யுங்கள்!" என்று ஆக்ஞாபித்தார்.

# தாயின் வஞ்சம்



கோமதி சுப்ரமணியம்

மனதை மயக்கும் மாலை நேரம். தெருவில் விற்றுச் செல்லும் மல்லிகையின் மணம் காற்றுடன் கலந்து வந்தது.

ஹாலில் உட்கார்ந்து பூத்தையல் வேலை செய்து கொண்டிருந்த சீதா தேவி ஏதோ ஒரு பாட்டை முணு முணுத்தவாறு இருந்தாள். அந்தச் சமயத்தில் வெளியே போயிருந்த அவளுடைய அப்பா சுந்தரம் பிள்ளை வந்து சேர்ந்தார்.

மகளுடைய உற்சாகத்தைக் கண்டு அவர் மனம் பூரித்தவராய், "காலையில் வந்து பார்த்து விட்டுப் போனார்களே, அந்த மாப்பிள்ளை விஷயத்தில் உன் அபிப்பிராயம் என்ன அம்மா?" என்று கேட்டார். சீதா திடுக்கிட்டு எழுந்து தன் அறைக்கு ஓடிவிட்டாள்.

அந்த அறையில் அவளுடைய அம்மாவின் படம் மாட்டியிருந்தது. அதைப் பார்த்ததும், "என் அம்மா மட்டும் இருந்திருந்தால் இப்படியெல்லாம் நடக்குமா? சின்னம்மாவின் சூழ்ச்சிக்கெல்லாம் அப்பாவும் இசைவாரா?" என்ற எண்ணம் அவளுடைய உள்ளத்தில் எழுந்தது. பக்கத்தில் மாட்டியிருந்த சித்தியின் படத்தைக் கூர்ந்து நோக்கினாள். அன்பே உருவாக அமர்ந்திருந்த சித்தியின் சாயல், "உன்னுடைய அம்மாவின் அன்புக்கு என்னுடைய அன்பு எவ்விதத்திலும் சளைத்ததல்ல" என்று கூறுவதுபோலிருந்தது.

சித்தி லட்சுமிக்குக் கண்டோர் கருத்தைக் கவரும் எழில் நிறைந்த வதனம். சுருள் சுருளாக நெளிந்து படியும் நீண்ட கூந்தல். புன்னகை தவழும் சாந்தம். இவ்வளவு அழகும் ஒருங்கே பொருந்திய லட்சுமி பெயரளவில் லட்சுமியே தவிர லட்சுமி கடாட்சம் என்பது அவளிடம் சிறிதேனும் கிடையாது. அவளுக்கு ஏழைக் குடும்பத்தில் பிறந்த புண்ணியத்தோடு நாலைந்து தம்பி தங்கைகளும் உண்டு. அவளது ஏழைமை நிலையே அவளை இளையாளாகவும் சம்மதிக்கச் செய்தது.

சுந்தரம் பிள்ளை பரம்பரைப் பணக்காரர் இல்லை. இருபத்தைந்து ரூபாய்க்கு மளிகைக் கடையில் மாதமெல்லாம் கணக்கெழுதிக் கொண்டிருந்தவர்தான். யுத்தம் ஆரம்பித்தது. பலரும் பலவிதத்தில் கொள்ளை லாபம் அடித்தனர். தினம் இரண்டணா கூலி கிடைக்காமல் தவித்தவர்களெல்லாம் மாதம் இருநூறு ரூபாய்ச் சம்பளத்தில் அமர்ந்திருந்தனர். சுந்தரம் பிள்ளையின் மூளையும் வேலை செய்ய ஆரம்பித்தது. கட்டிடங்கள் 'காண்டிராக்ட்' எடுத்துக் கொண்டார். அவ்வளவுதான்; அதிர்ஷ்ட தேவதை அவர் பக்கம் தலை சாய்த்தது. திடீரென்று பெரிய பணக்காரராகி விட்டார். பேரும் புகழும் தானாகவே வந்து அவரிடம் சரணடைந்தன. இத்தனை இன்பத்திற்கும் மேலாகக் குழந்தை சீதாவும் பிறந்து விட்டாள். கேட்க வேண்டுமா மகிழ்ச்சிக்கு? இந்த அதிர்ஷ்டங்களைக் கணவனுடன் சேர்ந்து அனுபவிக்கக் கொடுத்து வைக்காத அவர் மனைவி

குழந்தை பிறந்த சில நாட்களில் இவ்வுலகினின்றும் விடை பெற்றுக் கொண்டாள்.

மனைவியை இழந்த துக்கத்தைக் குழந்தையின் மழலையில் சற்று மறந்திருந்தார் சுந்தரம் பிள்ளை. எவ்வளவுதான் அருமையாக வளர்த்தாலும் குழந்தை தாயன்பு இல்லாமல் ஏங்கி விடுமல்லவா? அதற்காகவே பிள்ளை லட்சுமியை மறுமணம் செய்து கொண்டார். லட்சுமியும் அவர் கொண்ட கருத்தை அறிந்து கொண்டவள் போல் குழந்தையிடம் வெகு அன்பாக நடந்து வந்தாள். கணவன் குழந்தையிடம் உயிரையே வைத்திருந்தபடியால், தான் ஏதாவது கடிந்துகொண்டால் அவர் மனம் நொந்து விடுமென்று அஞ்சி குழந்தைக்கு அதிகச் செல்லம் கொடுத்தே வளர்த்து வந்தாள். அளவுக்கு மீறிய செல்லத்தால் சீதா குழந்தைப் பருவத்திலிருந்தே பிடிவாத குணமும் கர்வமும் படைத்தவளாக ஆகிவிட்டாள்.

லட்சுமியைக் கண்டால் சீதாவுக்கு எப்பொழுதும் அலட்சியம். "சிறிசுதானே? குழந்தைக்கு என்ன தெரியும்? வயசானால் எல்லாம் சரியாகி விடும்!" என்று லட்சுமி தன்னையே தேற்றிக் கொள்வாள். ஆனால் சீதாவுக்கு வயசாக ஆக லட்சுமியைப் பரிகாசம் செய்வது அதிகமானதே யொழியக் குறைந்தபாடில்லை.

சுந்தரம் பிள்ளை கலியாணத்தின்போது லட்சுமியின் பெயருக்குக் கொஞ்சம் நிலம் எழுதி வைத்திருந்தார். இதைச் சாக்காக வைத்துக்கொண்டு லட்சுமியை அடிக்கடி மட்டம் தட்டுவதில் சீதாவுக்கு அளவற்ற ஆனந்தம். "என் அப்பா எழுதி வைத்த சொத்துக்கு ஆசைப்பட்டுத்தானே அவரை இளையாளாக மணந்து கொண்டாய்? நானாக இருந்தால் இதைவிட உயிரையே விடத் துணிந்திருப்பேன்!" என்று இடித்துக் காட்டுவாள். அப்பொழுதெல்லாம் லட்சுமி தலை குனிந்தவாறு மௌனமாக இருந்து விடுவாள்.

நகைகள் போட்டுக் கொள்வதற்கோ, பட்டுப் புடவைகள் அணிந்து கொள்வதற்கோ, தான் மட்டும்தான் அந்தஸ்துடையவள், லட்சுமி அதற்கு லாயக்கற்றவள் என்பது சீதாவின் கொள்கை.

★

அன்று தீபாவளி. இருவருக்கும் ஒரே மாதிரி நீலப் பட்டுப் புடவை எடுத்திருந்தார் சீதாவின் தகப்பனார். இருவரும் அவற்றைக் கட்டிக்கொண்டு தீபத்தை நமஸ்கரித்தனர். லட்சுமியின் சிவந்த மேனிக்கு நீலப் பட்டுப் புடவை பொருத்தமாக இருந்தது. இயற்கை யழகும் செயற்கை யழகும் சேர்ந்து போட்டியிட்டு லட்சுமியின் அழகைப் பன்மடங்கு எடுத்துக் காட்டியது. ஆனால் சீதாவின் மாநிறத்துக்கு அவ்வளவு பொருத்தமாக இல்லை.

இருவரும் லட்சுமியின் தாயாரை நமஸ்கரித்தனர். அவள் அளவற்ற அன்புடன் இருவரையும் ஆசிர்வதித்தாள். அத்துடன் நின்றிருக்கக் கூடாதா? பாட்டி என்கிற முறையில், "சீதா! உன் நீலமேக வர்ணத்துக்கு இந்த நீலப் பட்டுப் புடவை அவ்வளவு பார்வையாக இல்லை. வர்ணப் பொருத்தம் பார்த்து வாங்கக் கூடாதோ? லட்சுமியைப் பார், அவளுக்கு எவ்வளவு பொருத்தமாக இருக்கிறது!" என்று கள்ளங் கபடமில்லாமல் கூறிவிட்டாள்.

அவ்வளவுதான்; ஏற்கெனவே உள்ளுக்குள்ளேயே பொருமிக் கொண்டிருந்த சீதாவுக்குப் பாட்டி இப்படிச் சொன்னது அவளைப் பரிகாசம் செய்வது போலிருந்தது!

"ஆமாம்; பெரிய ஜமீன்தார் மகள்! எப்பொழுதும் பட்டுப் பட்டாகக் கட்டி வழக்கமோ இல்லையோ? அதனால் அவளுக்கு மட்டும் மிகவும் பொருத்தமாகத்தானிருக்கிறது!" என்று எரிந்து விழுந்தாள்.

இப்படிக் குத்தலாகப் பேசி விட்டதினால், தான் அழகில்லை என்பதை மறைத்துவிட்டதாகச் சீதாவின் நினைப்பு.

காலச் சக்கரம் எப்பொழுதும் ஒரே மாதிரி சென்று கொண்டிருக்குமா? இக

சென்று யுத்தம் நின்று விட்டது. சுந்தரம் பிள்ளையின் வருமானமும் குறைந்து விட்டது. கொள்ளை லாபம் அடித்தவருக்கு வேறு எந்த வேலையைத்தான் திறமையாகப் பார்க்க முடியும்? தேடிவைத்த சொத்துக்களெல்லாம் சும்மா இருந்து சாப்பிடுவதிலேயே தீர்ந்துவிட்டன. கடைசியாக லட்சுமியின் பெயருக்கு எழுதி வைத்திருந்த நிலம் மட்டுமே இருந்தது. அதை ஒருவருக்கும் விற்க அநுமதி கிடையாதாகையால் அதை மட்டும் வைத்துக் கொண்டு மானத்துடன் காலம் கழிக்க முடிந்தது.

பணம் இருக்கும்பொழுதுதான் சீதா லட்சுமியை அவமரியாதையாகப் பேசினாளென்றால், இப்பொழுதும் அவளுக்குக் கிடைக்கும் வசவு குறைந்தபாடில்லை.

"இந்தத் தரித்திரம் பிடித்த பீடை இந்த வீட்டில் எந்த நேரத்தில் காலடி எடுத்து வைத்தாளோ? பிறந்தகத்தைப் போல் துடைத்து வைத்து விட்டாள்! பெயர் மட்டும் லட்சுமியாம், லட்சுமி!" என்றெல்லாம் பெரிய கிழவி மாதிரி சீதா பேசுவாள்.

"சீதா! எதற்காக இப்படியெல்லாம் பேசுகிறாய்? ஏதோ கெட்ட காலம் இப்படியாகிவிட்டது என்றால் எப்பொழுதுமே இப்படியே இருந்துவிடப் போகிறோமா? இப்பொழுது நமக்கென்ன, சாப்பாட்டிற்கு வழியில்லையா?" என்று சமாதானம் கூற முயற்சிப்பாள் லட்சுமி.

"ஏதோ பிறந்தகத்திலிருந்து சாப்பாட்டிற்கு வழி பண்ணுவதுபோல் ஜம்பம் அடித்துக் கொள்கிறாயே! என் அப்பா எழுதி வைத்த நிலத்தைக் கொண்டுதானே இவ்வளவு பெருமையடித்துக் கொள்கிறாய்? உன்னால்தான் சாப்பாடு கிடைக்கிறதென்பதை இடித்துக் காட்டுகிறாயோ?" என்று சீதா குதர்க்கம் பேசி வாதிப்பாள்.



வாத்தியார்:—இதில் என்ன பாடம் எழுதி யிருக்கிறாய்? சிலேட்டு பூராவும் ஒரே கறுப்பாக இருக்கிறதே?

மாணவன்:—இரவில் இரண்டு பேர் நடந்து போகிறார்கள் ஸார். இருட்டல்லவா! அதனால் ஒன்றும் தெரிய வில்லை.

★

இதற்கு மத்தியில், சுந்தரம் பிள்ளை சீதாவுக்கு வரன் தேடுவதில் முனைந்தார். எத்தனையோ வரன்களைத் தட்டிக் கழித்த பிறகு, கடைசியாக அன்று காலை வந்து பார்த்த வரன் சுந்தரம் பிள்ளைக்குச் சற்றுத் திருப்தியாயிருந்தது. பெண்ணின் அபிப்பிராயத்தைக் கேட்டார்.

தந்தையின் கேள்விக்குப் பதில் சொல்ல இயலாதவளாய் அறைக்கு ஓடின சீதாவின் மனத்திரையின் முன் சினிமாப் படம் போல் இத்தனை காட்சிகளும் தோன்றி மறைந்தன.

இந்தச் சமயத்தில் அங்கே வந்த லட்சுமி தன்னுடைய கணவனை நோக்கி, "என்ன! இது விஷயமாகச் சீதாவைக் கேட்டீர்களா? என்ன சொன்னாள்?" என்று கேட்டாள்.

"என்ன சொன்னால் இவளுக்கென்ன கவலையாம்?" என்று தன் அறையில் இருந்தபடியே முணுமுணுத்துக் கொண்டாள் சீதா.

"அவளுக்குத் திருப்தியில்லை போல் தோன்றுகிறது!" என்றார் அப்பா.

"நான் ஒன்று சொல்லுகிறேன். அதன்படி கேட்கிறீர்களா? என் பெயரில் இருக்கும் நிலத்தைச் சீதாவுக்கு எழுதி வைத்து விடுகிறேன். பேசாமல் அவளை என் தம்பிக்குக் கொடுத்து விட்டால் என்ன? நிறையச் சம்பாதிக்கிறான்; பார்ப்பதற்கும் அழகாயிருக்கிறான்........!

என்ன! சித்தியா இப்படிப் பேசுகிறாள்! சீதா நினைத்துக் கொண்டதற்கும் லட்சுமி நடந்து கொண்டதற்கும் எத்தனை வித்தியாசம்!

தன்னுடைய அறியாமைக்காக உள்ளம் கொதித்துக் குமுறிய சீதா, அந்த கணம் தன் அறையிலிருந்து ஓடோடியும் வந்து லட்சுமியின் கால்களைக் கட்டிக்கொண்டு, "அம்மா!" என்றாள் குழந்தை போல.

ஆம்; உண்மையிலேயே அவள் அம்மாதான். மாற்றாந் தாய் அல்லவே அல்ல!




காலை வேளையில் ஒரு இந்திய ரோஜா தோட்டத்திலேற்படக் கூடிய குதூகல உணர்ச்சியை வினோலியா ஒயிட் ரோஸ் சோப் உங்களுக்குத் தருகிறது. இச் சோப்பின் மிருதுவான செழிப்பாயுண்டாகும் நுரை மிகவும் நேர்த்தியான சருமத்தையும் ஒழுங்காக சுத்தம் செய்கிறது—மேலும் அதன் நறுமணம் உங்களைச் சுற்றிலும் மனோஹர பரிமளத்தைப் பரவச் செய்கிறது. உங்கள் அழகை அதிகப்படுத்த இச் சோப்பைவிட மென்மையானதோ, தகுதியானதோ வேறு கிடையாது. வினோலியா ஒயிட் ரோஸை உங்கள் இஷ்டத்திற்குரிய சோப்பாகக் கொள்ளுங்கள்.

# வினோலியா ஒயிட் ரோஸ் சோப்

VWR. 19-23 TM

VINOLIA CO., LIMITED, LONDON, ENGLAND

# வீடு எப்படி?

ரா. வி.

அன்று மாம்பலம் ஸ்டேஷனை விட்டு 'எலெக்ட்ரிக்' ரயில் நகரும்போது, இரண்டாவது வகுப்பு வண்டியில் என்னைத் தவிர மூன்றே பேர் இருந்தனர்.

"நடராஜா, அன்றைக்கு நாம் பார்த்தோமே, அந்த வீடுதான் வேண்டும்னு பையன் பிடிவாதம் பிடிக்கிறான். வீட்டிலே அவ்வளவு பணம் போடுவானேன்னு யோசிக்கிறேன். உன் அபிப்பிராயம் என்ன?" என்றார் நண்பர்.

"எவ்வளவு அழகான வீடு! அவ்வளவு அழகான வீடு எங்கேயப்பா கிடைக்கிறது? பையன் ஆசைப்படுகிறான்னு, எடுத்துடேன்."

"உண்மையிலே அதுமாதிரி அழகான வீடு கிடைக்கிறதுங்கிறது சிரமந்தான். அதன் ஜன்னல் வேலைப்பாட்டுக்கே பணம் கொடுக்கலாமே. இருந்தாலும் நமக்கு, இதிலே என்டா இவ்வளவு பணம் போடணும்னு தோன்றது."

"என்னவோ அப்பா, பையன் ஆசைப்படறான்னு நீதான் சொன்னே! குழந்தைகளுக்காக ஒவ்வொருத்தர் என்ன என்னதான் செய்யலே?"

"உனக்கென்ன, குழந்தையா குட்டியா? குடும்பத்திலுள்ள கஷ்டம் தெரிஞ்சதுன்னு இப்படிச் சொல்லுவயா? 35 ரூபாயைக் கையை விட்டு இழக்கிறதுன்னு எப்படியிருக்கு, தெரியுமா?"

"நான் ஒண்ணும் சொல்லலையப்பா? இஷ்டமிருந்தா எடுத்துப் போடு; உன்னிஷ்டம். எனக்கென்ன!"

"இந்த வீட்டுக் கிராக்கி காலத்திலே, 35 ரூபாய்க்குச் சகல வசதிகளும் உள்ள வீடு கிடைக்கும் பொழுதுகூட வேண்டாம் என்கிறீர்களே? உங்களுக்கு அந்த வீடு வேண்டாம்னு, எனக்காவது அந்த வீட்டை முடிச்சு வையுங்களேன். உங்களுக்குக் கோடிப் புண்ணிய முண்டு" என்று கெஞ்சாக் குறையாகக் கேட்டேன் நான்.

வெங்கிட்டு என்பவர், புன்முறுவலுடன், "ஓகோ, அதற்கென்ன! எனக்கு அந்த வீடு வேண்டாம். நீங்கள் வேண்டுமானால் பாருங்கள்" என்றார்.

"என் ஸார், அந்த வீடு எங்கே யிருக்கு?" என்றேன்.

"சைனாபஜாரில் 'பான்ஸி டாய்ஸ் ஷாப்'புக்குப் போங்கோ; மயிலாப்பூர் வெங்கிட்டுவுக்கு அந்த வீடு வேண்டாமாம். என்னை எடுத்துக் கொள்ளச் சொன்னார் என்று சொல்லுங்கோ. தந்துடுவார்" என்றார் அவர்.

சைனாபஜாரை நோக்கி நடந்தேன். அந்தக் கடையைத் தேடிப் பிடித்து, உள்ளே போய், முதலாளியிடம், "ஸார், மயிலாப்பூர் வெங்கிட்டுவுக்கு அந்த வீடு வேண்டாமாம். எனக்குக் கொடுக்குமாறு உங்களிடம் சொல்லச் சொன்னார்" என்றேன்.

"அப்படியா! ரொம்ப சரி; ஏன் அவருக்குப் பிடிக்கவில்லையா?" என்றார் மானேஜர் நாயுடு.

"வீடு பிடிச்சிருக்கு; ஆனால் பணம் அதிகம்னு யோசனை பண்றார்" என்றேன்.

"ஓகோ! அப்படிங்களா? சரி, உங்களுக்குச் சம்மதம்தானே?"

"எனக்குச் சம்மதம்தான்."

"டேய் பையா! ஐயாவுக்கு, அந்த வீட்டைக் காட்டு!"

"இதோ வந்துட்டேங்க" என்று சொல்லிக் கடைப்பையன் எழுந்து உள்ளே சென்றான்.

சிறிது நேரத்தில், துணியால் துடைத்த வண்ணம், ஒரு பொருளைக் கொண்டுவந்து என் முன் விளிம்பில் வைத்து, "பாருங்க ஸார்!" என்றான்.

பார்த்தேன்! அதுவும் ஒரு வீடுதான்! 'பிளைவுட்'டினால் நேர்த்தியாகச் செய்யப்பட்டிருந்த ஒரு விளையாட்டு வீடு அது!

வேறு வழியில்லாமல், வீட்டின் கிரயம் 35 ரூபாயையும், விற்பனை வரி ஆறணாவையும் கொடுத்துவிட்டு, கையில் 'பில்'லுடனும், அந்த விளையாட்டு வீட்டுடனும், கடையை விட்டு வெளியேறினேன்!

---

# சத்தியமூர்த்தி ஞாபகம்



ஸ்ரீ ராஜு
(கோமதியாக நடித்தவர்)

கால் நூற்றாண்டுக்கு மேல் தேச சேவை புரிந்து இந்திய சுதந்திரப் போரில் முன்னணியில் நின்ற தீரர் சத்தியமூர்த்திக்கு எத்தனையோ இடங்களில் ஞாபகச் சின்னம் ஏற்படுத்திய போதிலும் டெல்லியில் ஞாபகச் சின்னம் ஏற்படுத்துவது மாதிரியாகாது. ஏனெனில், புயலும் மழையும் போல் வீரகர்ஜனை புரிந்து டெல்லி சட்டசபையில் அவர் சொற்போர் நடத்தியது மறக்க முடியாத சம்பவமாகும். அதை மறவாத புது டெல்லித் தமிழர்கள் ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு ஞாபகச் சின்னம் ஏற்படுத்தும் முயற்சியை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். மேற்படி ஞாபகச் சின்ன நிதிக்காக டில்லி தமிழ்ச் சங்கத்தார் சென்ற 26—5—46 அன்று வேவல் தியேட்டரில் "கோமதியின் காதலன்" என்னும் தமிழ் நாடகத்தை நடத்திக் காட்டினர். ஆரம்பம் முதல் கடைசிவரையில் ஒரே சிரிப்பும் கரகோஷமும்தான். காட்சிகளெல்லாம் தத்ரூபமாய்க் காட்டப்பட்டன. மூவாயிரம் ரூபாய் வசூல் ஆயிற்று. டில்லி தமிழ்ச் சங்கத்தின் முயற்சியைப் பெரிதும் பாராட்டுகிறோம்.






"ஏன்னா, கேட்டீங்களா! நம்ம ஊரிலே இன்னொரு புது ஜட்கா வந்திருக்காமே, தெரிஞ்சதா?" என்று கேட்டாள் தங்கம்.

"ஆமாம்; அந்த ஆலங்குறிச்சி அங்கப்பன் ஒரு புது ஜட்கா பிடிச்சுண்டு வந்திருக்கான். வண்டி ரொம்ப அழகாயிருக்கு; சக்கரத்துக்கு ரப்பர் டயர் போட்டிருக்கு. குதிரைகூட நல்ல ஜாதிக் குதிரைதான்!" என்றான் செல்லப்பன்.

"என்ன, இது! கொஞ்சமாவது வருத்தம் கிருத்தம் இல்லாமல் அங்கப்பன் வண்டியைப் பத்தி நீங்களே ஆகாசம் மட்டும் ஒசத்தியாப் பேசறீங்களே!"

"இதென்னடி, நீ இப்படிச் சொல்றே? நான் எதுக்காக வருத்தப்படணும்?"

"நீங்க எப்பவும் இப்படித்தான்! என்னடா நமக்கு எட்டிக்குப் போட்டியா இன்னொரு எதிராளி வந்து மொளைச்சிருக்கானேன்னு கொஞ்சங்கூடக் கவலையே யில்லே!"

"ஏண்டி, வீணா மனசை அலட்டிக்கிறே? ஊரிலே ஒண்ணு என்ன, நாலு தங்க ஜட்காத்தான் வரட்டுமே! அதனாலே நமக்கென்ன? நமக்கு இவ்வளவுன்னு படி அளக்கிறவன் அவன் பாட்டுக்கு அளந்துட்டுப் போறான்!"

"என்னமோ போங்க! நீங்க சொல்றது என் மனசுக்குக் கொஞ்சங்கூடச் சமாதானமா யில்லே!"

"இதோ பாரு, தங்கம்! இந்த ஊரிலே புதிசா முனிசிப் கோர்ட்டு வேறே வந்திடுச்சா, அதிலே யிருந்து என் பாடு கொஞ்சம் கஷ்டமாயில்லே போயிடுச்சு. ஊரிலே இருக்கிற எல்லாருக்கும் எந்த ஜோலிக்கும் இந்த ஒரு செல்லப்பன் ஜட்காத்தான் இருந்தது. அதிலேயும் வக்கீல் ஐயங்காரும், மிராசு ராயரும் நேரே சமயத்தில் தங்கள் ஆளுங்களை அனுப்பச்சே நம்மப் பாடு போதும் போதும்னு ஆயிடறது. ராயர் வீட்டுக்குப் போனா வக்கீல் ஐயங்காருக்குக் கோபம்; ஐயங்கார் வீட்டுக்குப் போனா ராயருக்குக் கோபம். அதாலே புதுசா இன்னும் ரெண்டு ஜட்கா வரக் கூடாதா இந்த ஊருக்குன்னு நான் ஏங்கிக் கிடந்தது அந்த ஆண்டவனுக்குத்தான் தெரியும். 'அண்ணாத்தை! நீங்க ஒரு ஜட்கா புதுசா பிடிச்சுண்டு வாங்க; பை நிறையப் பணம் கிடைக்கும்'னு நான்தானே தூபம் போட்டேன் அங்கமுத்துக்கு!"


தங்கம்

"உங்க போக்கே அலாதிதான். ஊருக்கெல்லாம் ஒரு வழின்னா உங்களுக்கு ஒரு வழி. எனக்கென்னமோ நெஞ்சு திக்கு திக்குன்னு அடிச்சுக்குது!"

இந்தச் சமயத்தில் மீராக
யர் "வண்டி வேண்டும்"
ன்று தம்முடைய ஆளே
னுப்பி வைத்ததால் அவர்க
டைய பேச்சு அத்துடன்
ன்றது.

★

பிறகு நான் "செட்டியார்
ண்டி கொண்டுவரச் சொன்
ரு!" என்று வாசலில் நின்றபடியே
ரைத்தான் அவருடைய வேலையாள்.
ல்லப்பனும் உடனே வண்டியுடன் புறப்
ட்டுச் சென்றான்.

எப்பொழுதாவது செட்டியார் வண்டி
காண்டு வரச் சொன்னால், மூன்று மைல்
ரத்திலுள்ள ரயில்வே ஸ்டேஷனுக்குப்
பாவதாய்த்தான் இருக்கும் என்பதை
னுபவ பூர்வமாக அறிந்திருந்த தங்கம்,
சல்லப்பனுக்குக் கொஞ்சம் கட்டுச் சாதம்
ட்டிக் கொடுத்தாள்.

ஆனால், அடுத்த பத்து நிமிஷத்திற்
ள் அவன் திரும்பி வந்து விட்டதைப்
ர்த்ததும் அவளுக்குத் தூக்கிவாரிப்
பாட்டது.

"என்ன, இவ்வளவு ஜல்தியாத் திரும்
ட்டே ?"

"சவாரி குதிக்கலே!"

"ஏன் ?"

"வாடகை விஷயமாத் தகராறு."

"செட்டியாரு நமக்குப் புதிசு இல்
லையே!—என்ன தகராறு வந்திருச்சி ?"



செட்டியார்

"வாடகை ஒரு ரூபாய் தரேன்றாரு. நம்ம மாமூல்தான் ரெண்டு ரூபாய் ஆச்சே! சரிப் பட்டு வரலே!"

"ஏன் இப்படி யாச்சு? செட்டியார் இதுவரைக்கும் தகராறு கொராறு பண்ணினவர் இல்லையே ?"

"அக்கமுத்து ஒரு ரூபாய் வாடகைக்கு வருகிறான், உனக்கு மாத்திரம் என்னவாம்னு கேட்கிறாரு!"

"நான் முதலிலேயே சொல்லலையா? நீங்கதானே அக்கமுத்து அண்ணாச்சி தங்கமான மனுஷன், அப்படி இப்படின்னு சொன்னீங்க! பாத்துக்கிட்டீங்களா, உண்மை செலவரம் என்னான்னு ?"

"அதனால் என்ன, தங்கம்! இதுக்கெல்லாம் கவலைப்பட்டு மனசு ஒடிஞ்சிட்டா என்ன பிரயோஜனம்? நான்தான் சொன்னேனே, மரம் வச்சவன் எப்படியும் தண்ணீர் வார்ப்பான் என்று!"

"ஆமாம்; அக்கமுத்து அண்ணாச்சிக்காவது இதிலே என்ன லாபம்? ஒண்ணு, நாமளாவது சுகப்படணும்; இல்லே, பிறத்தியானாவது சுகப்படணும். ரெண்டும் கெட்டான் இப்படி வாடகையைக் குறைச்சி வாங்குறதிலே யாருக்குச் சுகம் ?"

அவன் சாதாரணமாகத் தன் மனதில் பட்டதைத்தான் சொன்னான். ஆனாலும் அதில் எவ்வளவு உண்மை!



"நான் இன்னின்ன இடத்துக்கு இத்தனை இத்தனை வாடகைன்னு வைச்சிருக்கேன். அங்கமுத்துவுக்கு அது இன்னும் சரியாய்த் தெரியல்லே. போகப் போக அனுபவத்திலே தெரிஞ்சிப்பான் அங்கமுத்து. சரி; நான் ஸ்டேஷனுக்குப் போய் வரேன்!" என்று சொல்லிவிட்டுச் சென்றான் செல்லப்பன்.

குறித்த நேரத்தில் ரயிலும் வந்தது. சிறிய ஸ்டேஷனானதால் சவாரி நிறைய அகப்படுவது துர்லபம். எப்படியோ இரண்டு மூன்று பேரைப் பேசி வண்டியைக் கட்ட முற்பட்டான் செல்லப்பன். அதற்குள் வெகு ரகசியமாக ஆளுக்கு இரண்டணா குறைத்து வாங்கிக் கொள்வதாக ஆசை காட்டி, அவர்களைத் தட்டிக் கொண்டு போய் விட்டான் அங்கமுத்து.

இந்த நேர்மையற்ற போட்டியைக் கண்டு செல்லப்பனின் உள்ளத்தில் துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது.

"சே! இதை யாராவது போட்டின்னு சொல்லுவாங்களா? இது தன்னுடைய நாசத்தைத் தானே தேடிக் கொள்ளற மாதிரி!" என்று தனக்குள் எண்ணிக் கொண்டே வீடு திரும்பினான். வண்டியிலிருந்து குதிரையை அவிழ்த்து லாயத்தில் கட்டி விட்டுத் தன் மனைவியிடம் சட்டைப் பையைத் தட்டிக் காட்டி உதட்டைப் பிதுக்கினான். அவன் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டபடி உள்ளே சென்றான்.

★

அங்கமுத்துவின் புது ஜட்கா அவ்வூருக்கு வந்த இரண்டொரு மாதங்களில் செல்லப்பனின் வருவாய் மிகவும் குறைந்து விட்டது. ஆனால் நீட்ட நீட்டக் கூர்மையாகும் கத்தியின் தன்மைபோல் செல்லப்பனின் மன உறுதியும் சகிப்புத்தன்மையும் மட்டும் வளர்ந்து கொண்டே வந்தன. அவன் எதைக் கண்டும் மனம் கலங்கவில்லை. என்ன ஆனாலும் சரி, பைத்தியக்காரத்தனமாய் அர்த்தமில்லாத போட்டியின் காரணமாக, நியாயமாகத் தான் வகுத்துக் கொண்டுள்ள வாடகையைக் குறைக்க அவன் ஒரு நாளும் உடன்படவில்லை.

ஒரு நாள் செல்லப்பன் குதிரையைத் தேய்த்துக் குளிப்பாட்டிக் கொண்டே,

"நீ கொடுத்து வைத்தவண்டா, பாராச்
இந்த ரெண்டு மூணு மாசமா ஒனக்கு
லே ஒண்ணுமே கிடையாது. கொள்ளும்
லும் மாத்திரம் யதேஷ்டமா கிடைக்கி
போதாததுக்கு எஜமான் கையாலே
தேச்சுக் குளிக்கிறது வேறே!" என்று

இதைக் கேட்டபடியே அங்கே
தங்கம், "பாராச்சாரிக்கு என்ன கு
சல்? நல்லாத் தின்னுக் கொழுத்து
மொதன்னு இருக்கு. நம்ம ரெண்டு பே
குத்தான் போதாத காலம்!" என்று
வருத்தப்பட்டாள்.

"என்ன, சுத்த அசடா யிருக்கிற
தங்கம்! நம்ம பாராச்சாரி நன்று யிருக்
தானே நமக்குப் பிழைப்பு! இன்னி
இல்லாட்டா நாளைக்கு நமக்கு
காலம் பிறக்காமலா போயிடும்!"

"ஆமாம்; என்னமோ சொல்ல
தேன். வேறே என்னமோ பேசிக்கிட்டு
துட்டேன். கேட்டீங்களா, சேதி!"

"என்ன?"



ராயர்

"நேத்துச் சாயங்கா
ஸ்டேஷனிலே பிரு
வாச்சே, அங்கமுத்து
ணுச்சி அஜாக்கிரதையா வ
ஓட்டினதிலே, ஒரு மோட்
மேலே மோதி கொடை
இருந்ததாம். நல்ல வேளைய
கொடை சாயாமப் போ
நல்லதாச்சு, இல்லா விட்
உள்ளே இருந்த ரெ
பொம்பிளைங்க, மூணு குழ
குட்டிங்க என்ன கதி ஆகியிருக்குமோ
மோட்டார் டிரைவர் கெட்டிக்காரனு
சட்டுன்னு பிரேக் போட்டு நிறுத்தினா

"ஏண்டி, எப்போ பார்த்தாலும் ஒன
அங்கமுத்துவின் நெனைவாவே யிருக்
எனக்கு இல்லாத பொறுமையும் கோப
ஒனக்கு என்னத்துக்கு?"

"அதுக்கு இல்லே; இப்படி கொஞ்
கூடப் பொறுப்பே இல்லாத மனுஷனு
என்னடான்னு பிழைப்பிலே மேலே மே
போகுறது; நியாயத்துக்கும் சத்தி
துக்கும் பாடு படற நமக்கு நாளு
நாள் ......"

"இதோ பாரு, தங்கம்! இதெல்லா
நமக்கு ஒரு சோதனை காலம். ஆண்ட
இந்த மாதிரியெல்லாம் நிலைமையை
படுத்தி நம்மைச் சோதிக்கிறான். அ
மேலே நம்பிக்கை வைச்சு, மனசுக்கு வி

# வர வர கையெழுத்து ....













் இல்லாமே நியாயமாயும் உண்மையாயும் ம வேலையைச் செய்துக்கிட்டு வந்தா டசியில் எல்லாம் சரியாய்த்தான் டியும்!"

"என்னமோ போங்க! எப்படித்தான் டியப் போறதோ!" என்றாள் தங்கம்.

★

மேற்படி சம்பவத்திற்குப் பிறகு ஒரு ரம் கழித்து, செட்டியாரே நேரில் ல்லப்பன் வீட்டைத் தேடி வந்தார் காவுக்காக.

"அங்கமுத்து வண்டி இல்லையா, செட்டி ரே?" என்று கேட்டான் செல்லப்பன்.

"இருக்கு; ஆனால் பெண்டுகளை அழைச் ண்டுப் போறதாலே பயமா யிருக்கு!"

"நான்தான் ஸ்டேஷனுக்கு ரெண்டு ரூபாய் கேட்டேனே!"

"என்ன பண்றது? நம்ம அவசரத்துக் குக் கொடுத்துத்தானே ஆகணும்! வேறே வழி?"

"சரிதான்!" என்று வண்டியைப் பூட் டிச் செட்டியாரை உட்கார வைத்துக் கொண்டான் செல்லப்பன்.

"செல்லப்பா! உனக்கு உலக நீதியே தெரியறதில்லே!" என்று ஆரம்பித்தார் செட்டியார்.

"ஏன்?"

"எவ்வளவு சீக்கிரத்திலே அங்கமுத்து கை நிறையச் சம்பாதிச்சுட்டான், பாரு!"

"சம்பாதிக்கட்டுமே!"

"காது போராட்டம்தான் நாமும் நடக்கணும். அப்போதான் நமக்கும் லாபம். இத்தனை நாளா நீயும் வாடகையைக் குறைச்சிண்டிருந்தா ..."

"இந்தா பாருங்க, செட்டியாரே! அவரவர்களுக்கு அவரவர்கள் லாபத்திலேயே கண். நான் வாடகையைக் குறைச்சா உங்களுக்குத்தானே லாபம்? எனக்கு ... ?"

"நீ வர வர சுத்த வாயாடியாய்ப் போயிட்டேடா, செல்லப்பா!" என்றார் செட்டியார் சிரித்துக் கொண்டே.

அந்தச் சந்தோஷத்தில் அவர் அவனுக்கு வாடகை தரும்போது, ஒரு ரூபாய் கூடுதலாகவே கொடுத்தார். செல்லப்பனுக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. ஆனாலும், "எனக்கு நியாயமா வரவேண்டியது வந்தால் போதுங்க!" என்று சொல்லிக் கொண்டே அவர் அதிகப்படியாகக் கொடுத்த ஒரு ரூபாயை அவரிடமே திருப்பிக் கொடுக்கப் போனான்.

"சும்மா வைச்சுக்க, செல்லப்பா! இந்த ரூபாயை நான் உன் குதிரைக்காகத்தான் கொடுத்திருக்கிறேன். அதற்கு பதே… மாத் தீனி வாங்கிப் போடு!" என்… சொல்லிச் செட்டியார் அந்த ரூபாயை… வாங்க மறுத்து விட்டார்.

அன்று செல்லப்பன் ஊருக்குத் திரும்பு… போதும் இரண்டு ரூபாய் வாடகை… கிடைத்தது.

வீட்டு வாசற்படியில் தங்கம் வழக்க… போல் நின்று கொண்டிருந்தாள், த… கணவன் வரவை எதிர்நோக்கி.

"இந்தாடி, தங்கம்! இன்னிக்கு அஞ்… ரூபாய் வரும்படி! என்ன இருந்தாலு… பாரச்சாரி பாரச்சாரிதான்!" என்… அவளிடம் பணத்தைக் கொடுத்தா… செல்லப்பன்.

"என்ன இருந்தாலும் தேசிங்கு ராஜன்… தேசிங்கு ராஜன்தான்!" என்று சொல்லி… புன்னகை பூத்தாள் தங்கம்.

வாழ்க்கைப் போட்டியில் வாய்மையு… நேர்மையும் இறுதியில் வெற்றியைத் தரு… என்பதைக் கண்டு கொண்ட அந்த இள… தம்பதிகளின் ஆனந்தத்திற்குப் பின்னண… கீதமாகக் கனைத்து நின்றது பாரச்சாரி.



## 1946-ம் வருஷத்துக் "கல்கி" சிறு கதைப் போட்டி

### பரிசு ரூ. 1000

### முதல் பரிசு ரூ. 500 ; ஐந்து பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ. 100

1. இந்தப் போட்டிக்கு அனுப்பும் கதைகள், தமிழ் நாட்டு மக்களின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்ட புதுக் கற்பனைகளாக இருக்க வேண்டும்.

2. கதையின் நீளம் "கல்கி"யின் ஐந்து பக்கம் முதல் பன்னிரண்டு பக்கத்துக்குள் அடங்குவதாயிருக்க வேண்டும்.

3. ஒரே ஆசிரியர் இரண்டு கதைகள் அனுப்பி வைக்கலாம். அதற்குமேல் அனுப்பக் கூடாது.

4. சென்ற 1945-ம் வருஷத்துப் போட்டிக்கு அனுப்பிப் பரிசு பெறாத கதைகளைத் திரும்பவும் அனுப்பக் கூடாது. அம்மாதிரி கதைகள் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படமாட்டா.

5. 1946-ம் வருஷம் செப்டம்பர் 30உக்குள் போட்டிக் கதைகள் "கல்கி" காரியாலயத்துக்கு வந்து சேர வேண்டும். கவரின்மேல் "சிறு கதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டும்.

6. எல்லாவற்றிலும் சிறந்ததென்று பஞ்சாயத்தார் கருதுகிற கதைக்கு முதல் பரிசு ரூ. 500-ம், அடுத்தாற்போல ஐந்து கதைகளுக்கு ஒவ்வொன்றுக்கு ரூ. 100 வீதமும் அளிக்கப்படும். பரிசு பெற்ற கதைகளின் 'காபிரைட்' உரிமை "கல்கி" காரியாலயத்தைச் சேர்ந்தது.

7. பரிசு பெறாத கதைகளில் பிரசுரத்துக்குத் தகுதியான கதைகள் பிரசுரத்துக்கு எடுத்துக் கொள்ளப்படும். அவற்றுக்கு ஆசிரியர் உசிதப்படி சன்மானம் வழங்கப்படும்.

8. முதற் பரிசு பெற எந்தக் கதையும் தகுதியற்றதென்று பஞ்சாயத்தார் கருதினால், பரிசுத் தொகை பஞ்சாயத்தாரின் உசிதப்போல் பிரித்துக் கொடுக்கப்படும்.

9. இந்த போட்டி சம்பந்தமான விதிகளை மாற்றவும் திருத்தவும் "கல்கி" ஆசிரியருக்கு உரிமை உண்டு.

10. சந்தேகம் ஏற்படும் எந்த விஷயத்திலும் "கல்கி" ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.

மானேஜர் : "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை

# படித்துப் பார்!

## அழகுராணி

[ஆசிரியர்: ஜயலட்சுமி ஆர். ஸ்ரீனிவாசன்; பிரசுரம்: புது மலர் நிலையம்: கோவை. விலை: ரூ. 2.]

'வெந்த மேனியும் சம்பக மொட்டுப் போன்ற அழகிய மூக்கும் மாதுளம் பூவை யொத்த சிவந்த உதடும் நீண்ட கருவிழிகளும் பரந்த நெற்றியும்' கொண்ட இந்திராவுக்கு, தன் அருமைக் காதலனிடமிருந்து வந்த கடிதத்தைப் படிக்க ஒழிவு கிடைப்பதில்லை. என்ன அக்கிரமம் பாருங்கள்! ஒருவர் இல்லாவிட்டால் இன்னொருவர் அவளை ஏவி, ஏவி வேலை வாங்குகிறார்கள். தன் கணவனிடமிருந்து வந்த கடிதத்தைப் படிப்பதற்கு அவள் துடிக்கத் துடிக்க வேலைதான் அதிகமாகிறது. கடைசியில் ஒரு விதமாக ஒழிவு கிடைத்துக் கடிதத்தைப் படிக்க ஆரம்பித்தால் ஒரே ஏமாற்றம்!......

"ஜயலட்சுமி ஆர். ஸ்ரீனிவாசனுக்குக் கலையுள்ளம் இருக்கிறது. அவருடைய கதைகளிலே உயிரும் உணர்ச்சியும் பின்னிப் பிணைந்திருக்கிறது. அழகும் ஆனந்தமும் நடம் புரிகிறது. கற்பனையும் கனவும் மயக்கம் தருகிறது" என்று முகவுரையில் ஸ்ரீ ரா.நா. கூறுவதை நாம் முழுதும் ஒப்புக் கொள்கிறோம்.

## ஆதித்ய ஹ்ருதயம்

[சாஸ்திர ரத்தினம் தேதியூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரியார் எழுதிய விரிவுரையுடன் கூடியது: பிரசுரம்: ஸி பிரதர்ஸ், திருவல்லிக்கேணி, சென்னை; விலை: அணா 12.]

"மந்திரத்தில் மாங்காய் விழுமா?" என்றால் "மாங்காய் மட்டும் என்ன. மந்திரத்தினால் அரக்கனுடைய தலைகளே விழும்!" என்று கூறலாம்.

இந்த உண்மையை அறிந்திருந்ததனால் தான் அகஸ்திய மகரிஷி ஸ்ரீ ராமனுக்காகக் காத்திருந்து ஆதித்ய ஹ்ருதய மந்திரத்தை உபதேசம் செய்தார்.

அலைகடலை அள்ளியுண்ட அகஸ்திய முனிவர் அருளிய ஆதித்ய ஹ்ருதயத்துக்கு, கடலனைய சாஸ்திரங்களின் கரைகண்ட தேதியூர் சுப்ரமண்ய சாஸ்திரியார் விரிவுரை எழுதியிருப்பது மிகவும் பொருத்தமானதாகும்.

## தமிழிசைப் பாடல்கள்

[தொகுதிகள் 8, 9, 11; அண்ணாமலை பல்கலைக் கழகம்: சிதம்பரம்; விலை: ஒவ்வொன்றும் ரூ. 3.]

சீகாழி அருணாசலக் கவி இயற்றிய இராம நாடகக் கீர்த்தனைகளில் ஐம்பதை எடுத்து ஸ்வரப் படுத்தி எட்டாந் தொகுதியாக வெளியிட்டிருக்கிறார்கள்.

"காலைத்தூக்கி நின்றாடும் தெய்வமே" என்ற பிரசித்தி பெற்ற பாடலை நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் இயற்றிய மாரிமுத்தா பிள்ளையின் பாடல்கள் சிலவற்றையும், சேவற்குளம் கந்தசாமிப் புலவர், நகரம் முத்து ரப்பக் கவிராயர் ஆகியவர்களுடைய பாடல்களையும் சேர்த்து ஒன்பதாம் தொகுதியாக வெளியிட்டிருக்கிறார்கள்.

இந்தத் தொகுதிக்கு ஸ்வரப் படுத்திய டி.என். சுவாமிநாதப் பிள்ளையவர்கள் காப்பி நாராயணி, கந்தர்வ மனோகரி, திருமூர்த்தி, போகவசந்தம் முதலிய பல புது ராகங்களைக் கையாண்டிருக்கிறார். இதைப் பார்க்கும்போது 'காலைத்தூக்கி நின்றாடும் தெய்வமே' போன்ற நமக்குத் தெரிந்த பாடல்கள் எந்தப் புதிய ராகத்தில் இருக்கின்றனவோ, என்று எண்ணிக் கொண்டே பார்க்கும்போது நமக்கு ஒரு சந்தோஷமயமான ஏமாற்ற முண்டாகிறது. அவை பாடப்பட்டு வரும் எதுகுல காம்போதியிலேயேதான் இருக்கின்றன.

பதினொன்றும் தொகுதியைப் பிரித்துப் பார்த்ததும் நம் உடம்பில் மின்சார சக்தி ஊடுருவிப் பாய்கின்றது.

'பக்தி மின்சாரம் அருள்வாய்—பரமாத்மனே'

என்று பக்தி மின்சாரத்துடன் யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் பாடிய பாடல் ஆரம்பமாகக் கொண்ட இத் தொகுதிக்கு டைகர் கே. வரதாச்சாரியார், கே. பொன்னையா பிள்ளை போன்ற பிரபல சங்கீத வித்வான்கள் ஸ்வரப்படுத்தி யிருக்கிறார்கள்.

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

## விவாகம்



இடப்பாடி போர்டு ஹைஸ்கூல் தலைமை ஆசிரியர் ஸ்ரீ எம். கே. சுவாமிநாத ஐயர் எம். ஏ., எல். டி. அவர்களின் குமாரத்தி சௌபாக்கியவதி கற்புலக்ஷ்மிக்கும், ஸ்ரீ டி. கே. சூரியநாராயணன் பி. இ. (ஆனர்ஸ்)க்கும் சென்ற ஏப்ரல் மாதம் விமரிசையாக விவாகம் நடந்தது.

★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★ ★

# பட்டே வேண்டாம்

வி. ஆர். ராமஸ்வாமி



வாசு பொன் வண்டுகள், பட்டுப் பூச்சிகள், தத்துக் கிளிகள், புழுக்கள், அட்டைகள் இவற்றைப் பிடித்து அவைகளின் கால்களையும் இறக்கைகளையும் பிடித்து இம்சை செய்து காட்டுவது அவன் அக்கா ஜானுவுக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. அவள் அம்மாவிடம் சொல்லிப் பார்த்தாள்.



அம்மா கண்டித்தாள். அதற்கு வாசு "அம்மாவும் நீயும் உடுத்தும் பட்டு எப்படிச் செய்கிறார்கள்? பட்டுப் பூச்சிகளை வேக வைத்து நூலை எடுத்துத்தானே?" என்று கேட்பான். தன் புஸ்தகத்திலிருந்து அந்தப் பாடத்தை வாசித்துக் கூடக் காண்பிப்பான்.

ஜானு பட்டுத் துணிகளையே உடுத்துவதை நிறுத்தி விட்டாள்.



ஒரு நாள் சாயந்திரம் வாசு மாமரத்தில் உயரமாயிருந்த மாம்பூவில் உட்கார்ந்திருந்த அதுவரை பார்த்திராத அழகிய வர்ணங்களைக் கொண்ட இறகுடன் கூடிய பட்டுப் பூச்சியைக் கண்டான். அதைப் பிடிக்கப்போய்க் கால் தவறிக் கீழே விழுந்து தரையில் ஊன்றிய கை எலும்பு உடைந்து ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப் பட்டான். அங்கே ஒரு மாதம் படுத்திருந்தான். ஜானு அவனை ஆஸ்பத்திரிக்குப் போய்ப் பார்ப்பாள்.

ஆஸ்பத்திரியிலிருந்துவந்த பிறகு அவன் பட்டுப் பூச்சிகளையும் புழுக்களையும் இம்சைகள் செய்வதை நிறுத்தி விட்டான். பள்ளி சிநேகிதன் யாராவது அப்படிச் செய்வதைக் கண்டால் "சீ, அதற்கு வலிக்கும்" என்று சொல்லித் தடுப்பான். இந்த அறிவு அவனுக்கு ஆஸ்பத்திரியில் கை உடைந்து கிடந்து வலியால் துன்பப் பட்ட பொழுது வந்ததென்று ஜானுவுக்குத் தெரியும். ஆனால் அவன் வெளியில் சொல்லவில்லை. தீபாவளிக்கு அப்பா வாங்கின பட்டுப் பாவாடையை உடுக்க மறுத்த ஜானுவைப் பார்த்து வாசு, "ஜே. ஸி. போஸ் என்னும் விஞ்ஞானி செடிக்கும் உணர்ச்சி இருக்கிறதென்று கண்டு பிடித்திருக்கிறார். நீ உலகத்தில் எதற்கும் இம்சை செய்யாமல் வாழ முடியாது" என்று சொல்லி அவள் பிடிவாதத்தை விடச் செய்யப் பார்ப்பான்.



ஆனால் ஜானு "நான் பொய்ப் பட்டுத் துணிகளை உடுத்துகிறேன். பட்டு வேண்டாம்" என்பாள்.

"அது பரதேசி சாமான்" என்று கூறுவான் வாசு.

"சரி, பட்டே வேண்டாமே" என்று பதில் கூறுவாள் ஜானு.



# சில்லறை விஷயம்!

"சுபஸ்ரீ"

இந்த அண்ணாசாமி இருக்கிறாரே, மனிதர் எமகாதகர்! எதையாவது சொல்லி அரையும் ஒன்றுமாகக் கடன் வாங்கிக் கொண்டு சென்று விடுவார். கான் கழித்தாவது திருப்பித் தருவார் என்கிறீர்களா? ஊஹூம்! அண்ணாசாமியிடம் சென்ற பணமும், யானை வாயில் போன கரும்பும் ஒன்றேதான்! இந்தக் கஷ்டத்திற்கு உண்மையைச் சொல்லி, "காலணா கொடுங்கள்!" என்றாவது கேட்பாரா? ஜன்மத்திலும் கிடையாது!

"ஸார், மார்க்கெட்டுக்குப் புறப்பட்டேன். சட்டைப் பையில் நேற்று வைத்த சில்லறை அப்படியே இருக்கிறதாக்கும் என்று வந்து விட்டேன். நம்ம பேரனைத்தான் தெரியுமே, உங்களுக்கு! பாருங்கோ, இப்ப எட்டணா குறையறது. உங்களிடம் கைமாற்றாக ..."

"சில்லறையாக என்னிடம் இல்லை போலிருக்கிறதே!"

"அதனாலென்ன? பரவாயில்லை, மீதியை வரும்போது கொண்டுவந்து தருகிறேன்."

சரிதானென்று நம்பிக் கொடுத்தோமானால், ஆசாமி நாலு நாளைக்கு அந்தப் பக்கம் தலையைக் காட்ட மாட்டார்.

இன்று வந்தவர் தனியாக வரவில்லை; கூட ஒரு குழந்தையையும் கூட்டிக் கொண்டு வந்திருந்தார். நான் அயர்ந்து தூங்குவதைக் கண்டு திரும்பிச் சென்றாரா? பாவி மனுஷர் பக்கத்தில் கிடந்த பத்திரிகையை எடுத்துப் படிக்க ஆரம்பித்து விட்டார்!




"ரோடுகளில் 'மெல்லப் போ' என்ற போர்டு போட்டிருக்கிறதே: பார்த்து விட்டு அதன்படி போவதுதானே?"

"அவ்வளவு வேகத்தில் நான் போகும் போது போர்டை எப்படிப் படிக்க முடியும்?"

இமைகளின் இடுக்கால் மெதுவாகப் பார்த்தேன். ஐயையோ! குழந்தையா அது? மேஜையில் வைத்திருந்த, 'ஸ்வான் இங்க்'கை யெல்லாம் கொட்டி மெழுகிப் புஸ்தகங்களை யெல்லாம்......!

என் தூக்கமெல்லாம் எங்கேயோ பறந்தது! 'ஐயோ!' என்று அலறிக் கொண்டே எழுந்து ஓடினேன். "என்ன ஐயர்வாள்! எழுந்து விட்டீர்கள் போலிருக்கிறதே!" என்றார் அண்ணாசாமி விஷமமாக. ஓடோடியும் சென்று அந்தக் கோட்டானை 'பளார்' என்று ஒரு அறை கொடுக்கலாமா என்று தோன்றியது. மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் 'தலைவிதியே!' என்று புஸ்தகங்களை நகர்த்தி, மையை யெல்லாம் துடைத்து வைத்தேன்.

சாவகாசமாக அண்ணாசாமி, "அடடா, கொட்டி விட்டானா?—ஏலே, கந்தா! வாடா, போகலாம்" என்று குழந்தையை அழைத்துக் கொண்டார். தற்செயலாக, அவன் கையைப் பார்த்தவர் திடுக்கிட்டு, "ஏலே, எட்டணாவை எங்கேடா போட்டாய்? சற்று நாழிகைக்கு முந்தி இங்கே கையில் வைத்திருந்தாயே!" என்று அதட்டினார். அந்த வாண்டுவும் எங்கெங்கேயோ கையைக் காண்பித்தது.

"அடாடா, நாழிகை ஆயிடுத்தே. அவசரமாப் போகணுமே! ஏன் ஸார், ஒரு எட்டணா இருந்தால் கொடுங்களேன். இங்கேதான் எங்கேயாவது கிடக்கும். கொஞ்சம் தேடி ..." என்று இழுத்தார்.

"மனிதன் தொலைந்தால் போதும்! அப்புறம் தேடி எடுத்துக் கொள்ளலாம்!" என்று கொடுத்தனுப்பி வைத்தேன்.

அண்ணாசாமி சென்ற பிறகு எட்டணாவைத் தேடினேன். சல்லடை போட்டுச் சலித்துத் தேடினேன்! ஊஹூம்; அந்த எட்டணா அகப்படவே இல்லை!



# காலக்ஷேபம்

### நசுங்கியது எது?

மாஜிஸ்ட்ரேட்:—உன் மண்டையை இரும்புத் தோண்டியால் எதிரி முட்டியதாகச் சொல்லியிருக்கிறாயே! ஆனால் உன் மண்டையில் ஒரு காயத்தையும் காணோமே!

வாதி:—இருக்கலாம், எஜமான்! எதிரி, அந்த இரும்புத் தோண்டியைக் கருமானிடம் நசுங்கல் எடுக்கக் கொடுத்திருக்கானுங்க!

—என். கல்யாணபசுபதி.

★

### அது தான் தெரியாது!

வழிப்போக்கன்:—என்னடா, பெரிய தொந்தரவாப் போச்சு! போனபோது ஒரு தரம் நோட்டீஸைக் கொடுத்தாய்; வர போதும் அதே நோட்டீஸைக் கொடுக்கிறாய். இதை வைத்துக் கொண்டு என்ன செய்கிறது?

நோட்டீஸ் கொடுப்பவன்:—அது தெரியாமல் தானே நானும் இதை எல்லாருக்கும் கொடுத்துண்டிருக்கேன்! —எஸ். நாகராஜன்.

★

### இனாம்!

ஒரு கடையில் பின்வருமாறு ஒரு நோட்டீஸ் ஒட்டப்பட்டிருந்தது:

"இவ்விடத்தில், 'ஆரோக்கிய சஞ்சீவினி' என்னும் மாத்திரை டப்பிகள் விற்கப்படும். இது சகல வியாதிகளையும் போக்கும் குணமுடையது. இதற்குள்ள குணங்கள் இல்லையென்று சந்தேகமற நிரூபிப்பவர்களுக்கு இதே மாதிரி டப்பிகள் 20 இனாமாகக் கொடுக்கப்படும்." —எஸ். வேலு.

### நல்ல பேரம்

பெண்ணின் தகப்பனார்:—சரி; நீங்கள் கேட்கிறபடியே ஆயிரம் ரூபாய் வரதட்சிணை தருகிறேன். நீங்கள் பெண்ணுக்கு என்ன கொடுக்கப் போகிறீர்கள்?

பிள்ளையின் தகப்பனார்:—ஒரு ரசீது வேணுமானால் எழுதிக் கையெழுத்துப் போட்டுக் கொடுக்கிறேன். —வி. செல்வராஜு.

★

### அந்தக் காலத்தில்!

முதல் கைதி:—நான் சிறு வயதில் மிகவும் செல்வமாய் வளர்ந்தேன். அப்பொழுதெல்லாம் எனக்குப் பால், பழம் முதலியவைகள் தான் ஆகாரம்.

இரண்டாம் கைதி:—ஆமாம்; அவைகளை வெல்லாம் எங்கே திருடினாய்? —ஆர். டி.

★

### தூங்க முடியாது

நோயாளி:—ஸார், எந்த மருந்து கொடுத்தாலும் என்னால் தூங்க முடியாது.

டாக்டர்:—பாதகமில்லை; அதற்கும் ஒரு மருந்து வைத்திருக்கிறேன்.

—ஜி. கிருஷ்ணமூர்த்தி.

★

### க்ஷேம விசாரணை

"நம்ம செட்டியார் உம்மைக் கேட்டதாகச் சொல்லச் சொன்னார்!"

"அவன் கிடக்கிறான், அற்பப் பயல்! என்னமோ நூறு ரூபாய் கொடுத்தான்; சும்மா சும்மா கேட்டுக் கொண்டே யிருக்கான்."

—தேவநாதன்.

★

### இல்லாத தோஷம்

"அவனைப் பார்த்தால் கருமியாக இருப்பான் போலிருக்கிறதே?"

"ஆமாம்; அப்படித்தான்......ஏன்; நீர்கூட அவனைக் கடன் கேட்டுப் பார்த்தீரா?"

—ஸ்ரீரங்கம் தேவநாதன்.

# உச்ச தொகை வரையில் உங்களுக்குச் சாத்தியமானதை எல்லாம் வாங்குங்கள்

## என்று ரிஸேர்வ் பாங்க் கவர்னர் சொல்லுகிறார்.



ஸர் சிந்தாமன் தேஷ்முக்
ஸி.ஐ.இ., இந்திய ரிஸேர்வ்
பாங்க் கவர்னர்.

"எதிர்காலத் தேவைகளுக்காகக் கொஞ்சம் சேர்த்து வைக்க விரும்பும் ஒரு எளியவரைப் பொறுத்தவரையில், இந்திய கவர்ன்மென்டாரால் வெளியிடப்படும் நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகளைவிடச் சிறந்ததும் பத்திரமானதுமான பணச்சேமிப்புச் சாதனம் வேறொன்றுமில்லை. உண்மையிலேயே, பணத்தை வட்டிக்குப் போட்டு வைப்பதற்கு அவை மிகச் சிறந்த சாதனங்களாகும். அதனால்தான், 5,000 ரூபாய் மதிப்புக்குமேல் இந்த ஸெர்டிபிகேட்டுகளை வாங்க யாரும் அனுமதிக்கப்படுவதில்லை. இந்த எல்லை வரையில் உங்களுக்குச் சாத்தியமானதை யெல்லாம் வாங்குங்கள் என்பதே நான் சொல்லக் கூடிய ஆலோசனையாகும்."

C. D. Deshmukh

### பார்த்தும் தெரிந்து கொள்ளக்கூடிய விஷயங்கள்

1. நீர் நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகளை 5, 10, 50, 100, 500, 1,000 அல்லது 5,000 ரூபாய்களுக்கு வாங்கலாம்.

2. எந்த ஒருவரும் 5,000 ரூபாய்க்குமேல் வாங்க முடியாது. இவை மிகச் சிறந்தவைகளானபடியால், எல்லாருக்கும் கிடைக்கும்பொருட்டு ஒருவருக்கு இவைகளை இன்ன மதிப்பு வரையில்தான் கொடுக்கலாமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஆனால், இரண்டுபேர் கூட்டாக 10,000 ரூபாய்க்கு வாங்கலாம்.

3. இவைகளின் மதிப்பு 12 வருஷங்களில் 50 சதவீதம் உயருகிறது. வட்டிக்குப் போட்டுவைக்கப்பட்ட ஒவ்வொரு ரூபாயும் ஒன்றரை ரூபாய் ஆகிவிடுகிறது.

4. உரிய காலத்தில் இவைகளினால் கிடைக்கும் லாபம் 4⅙ சதவீதம் தனிவட்டியாகும்.

5. சம்பாதிக்கப்பட்ட வட்டிக்கு இன்கம் டாக்ஸ் செலுத்த வேண்டியதில்லை.

6. இவைகளை 2 வருஷங்களுக்குப் பிறகு (5 ரூபாய் ஸெர்டிபிகேட்டுகள் விஷயத்தில் 18 மாதங்களுக்குப் பிறகு) ரொக்கமாக மாற்றிக்கொள்ளலாம்; ஆனால், நீர் இவைகளை முழுக் காலமும் வட்டிக்கு விட்டுவைத்திருந்தால் உமக்கு நல்ல லாபம் கிடைக்கும்.

7. சிறு தொகைகளைச் சேர்த்துவைப்பவர்கள் 1 ரூபாய், 8 அணா அல்லது 4 அணாவுக்கு ஸேவிங்ஸ் ஸ்டாம்புகள் வாங்கலாம். சேர்க்கப்பட்ட ஸ்டாம்புகளின் மதிப்பு 5 ரூபாயானதும், அவைகளைக்கொடுத்துவிட்டு அவைகளுக்குப் பதிலாக ஒரு ஸெர்டிபிகேட் பெற்றுக்கொள்ளலாம்.

8. இந்த ஸெர்டிபிகேட்டுகள், ஸ்டாம்புகள் ஆகிய இரண்டையும் தபாலாபீஸ்களிலாவது கவர்ன்மென்டாரால் நியமிக்கப்பட்ட அதிகாரம்பெற்ற ஏஜெண்டுகளிடமாவது ஸேவிங்ஸ் பிரோக்களிலாவது பெற்றுக்கொள்ளலாம்.

உமது பணத்திலிருந்து 50 சதவீதம் லாபம் கிடைக்கும்படிச் செய்துகொள்ளவும்.

# நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்டுகள் வாங்கவும்.

AC 1 ATM



# சந்தோஷமும் திருப்தியும்

அந்த மோஹனப் புன்னகையில் எத்தனையோ கருத்துக்கள் அடங்கியுள்ளன!

# லாக்டோஜன்

சில சமயங்களில் குழந்தைக்கு, இயற்கையாயுள்ள ஆகாரம் உதவுபடியில்லாது போகும். அத்தகைய சந்தர்ப்பத்தில் லாக்டோஜன் ஈடாகிறது; பிரத்யேக லாக்டோஜன் ஆகாரப் பரிணமம் — தாய்ப் பாலுடன் சிறிது தயிரின் சேர்க்கைக்கு அநேகமாக சமம். குழந்தையின் ஜீரண சக்திக்கு எவ்விதக் குந்தகமும் ஏற்படாமல் — அதற்குத் "தளதள"த்த மேனி உண்டாக்கத் தேவையான புஷ்டியுள்ள ஆகாரமாகிறது. ஆகையால்தான் லாக்டோஜன் குழந்தைகள் — நாளடைவில் நிரந்தர தேகாரோக்யத்துடனும், சந்தோஷமாயும், திருப்தியாகவும் இருக்கின்றன.

உங்கள் குழந்தைக்கு தேகவளர்ச்சி யில்லாவிட்டாலும், அதிருப்தி கொண்டதாக காணப்பட்டாலும் — அவனுக்கு லாக்டோஜனை அளியுங்கள்!

"தாய்மார்களுக்கு லாக்டோஜன் புத்தகம்" - [illegible] தபால் பெட்டி நெ. 180- சென்னை, [illegible]








Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

Regd. No. M. 4392

# சார்லீஸ்




# மில்க் பிஸ்கட்ஸ்

அழகிய
பாக்கெட்டுகளில்
காற்றுப்புகாத
உறைகளில்

**CHARLEY & CO., USILAMPATTI.**

Agents For Salem & N. Arcot Dts. The General Agencies Corporation First Agraharam, Salem. Agents For Nilgiris: Messrs. Brilliant Traders, Ootacamund.